உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 6 } இரௌத்திரி ஹு ஆவணிமீ கூ
1920 ஹு ஆகஸ்ட்மீ 16உ { பகுதி 2

## கடவுள் வணக்கம்.

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்த்ரதள
புஷ்பமிசை வீற்றி ருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்
னாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச் சரிக்க வசமோ
வாரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
வன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
மானந்த ரூப மயிலே
வாரணியு மிருகொங்கை மாதர்மகிழ் சங்கைபுகழ்
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே

தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம் போர்த்த
பாதகச் சிந்தை பெற்ற பதகனுன் பாத நீழ
லாதர வடைய வுள்ளன் பருள்கிலை யாயின் மற்றியார்
போதனை செய்ய வல்லார் பூரணா னந்த வாழ்வே.

எண்ணிய வெண்ண மெல்லா மிறப்புமேற் பிறப்புக் காசை
பண்ணியென் னறிவை யெல்லாம் பாழாக்கி எனைப்பா ழாக்குந்
திண்ணிய வினையைக் கொன்று சிறியனை யுய்யக் கொண்டாற்
புண்ணிய நினக்கே யன்றோ பூரணா னந்த வாழ்வே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி௵ ஆவணிமீ ௧௨

## கடவுளை எப்போது எங்கே காணலாம்?

ஒருவன் நெடுங்காலம் பல நூல்களைக் கற்றும் கடவுளையறியும் மார்க்கம் இன்னதென் றுணராதவனாகி "சே! இனி நாமே சிந்தித்துக்கொண் டிருப்பதில் பயனின்று. உலகைத் துறந்த யாரேனு மோர் மகானிடம் இவ் விஷயத்தைக் கேட்டறிய வேண்டும்" என்று தீர்மானித்துக் கொண்டு அடவியில் நுழைந்து எந்த மகானாவது அகப்படுவாரா என்று தேடத்தொடங்கினான்.

ஒருநாள், நறுமணம் வீசும் மலர்கள் நிறைந்த புஷ்பச்செடிகளும், இனியகனிதரும் உயர்ந்த விருட்சங்களும் அடர்ந்துசெழித்து வளர்ந்திருந்த ஒருவனத்தில் பிரம்மாண்டமான ஒரு நதிதீரத்தில் ஓர் மகான் அமர்ந்திருந்தார். கடவுளைக் காணவிரும்பிய அம்மனிதன் அவரைக் கண்டதும் கடவுளையே கண்டவன்போல் மிக்க சந்தோஷமடைந்து, அவர் பாதங்களில் சாஷ்டாங்கமாகச் சேவித்து, "பரம்பொருளே மானிடச் சட்டை சாத்தி வந்தது போன்ற ஞான சொரூபியே! அடியேனது அஞ்ஞானத்தை யொழித்து மெய்ஞ் ஞான நிலையை எனக்குப் போதித்து அருள்புரிய வேண்டும். கடவுளை எப்போது எங்கே காணலாம்? இதைமட்டும் ஏழையேற்கு உண்மைப்படி கூறவேண்டும்" என்று அவர் முன்னின்று அஞ்சலியஸ்தனாகப் பிரார்த்தித்தான்.

அம்மகான் அவனை யுற்று நோக்கி அவன் மனோநிலையையும் அறிவின் தரத்தையும் உணர்ந்து,

"மகனே! ஆற்றின் கீழ்ப்பக்கம் சுமார் அரை மைல் தூரத்தில் ஓர் பிரம்மாண்டமான ஆலமர முளது. அந்த விடத்தில் ஆறு தெற்கு நோக்கித் திரும்புகிறது. நாளைக் காலை ஏழு மணிக்கு நீ அங்குச்சென்று ஆற்றுநீரை நோக்கிக்கொண் டிருந்தால் அங்கொரு பிரம்மாண்டமான மச்சம் வரும். இப்போது நீ என்னைக் கேட்ட கேள்வியை யதனிடம் கூறினால் அது விடையளிக்கும்" என்றருளி

ணர். குருவை யடுத்த சீடன் அவர் கட்டளையைச் சிரமேலேற்று அவருக்கு மறுபடி நமஸ்காரம் செய்து விட்டுச் சென்றான்.

அஷ்டமா சித்தியில் வல்லுநராகிய அம்மகான் சீடனுக்குக் கூறியபடி மறுநாள் காலை ஏழு மணிக்கு மச்ச உருக்கொண்டு குறித்த விடத்தில் அவனுக்குத் தரிசன மளித்தார். அம்மச்சத்தின் பருத்து நீண்ட உருவத்தைக் கண்ட சீடன், நமது குரு கூறியது. இம் மீனாகத்தா னிருக்குமென யூகித்துக்கொண்டு, "ஓ மச்சமே! தயவு செய்து சற்று நின்று நான் கேட்கும் ஒரு கேள்விக்கு விடையளித்துச் செல்ல வேண்டுகிறேன். என் குருவாகிய மகான் உன்னிடம் அதைக் கேட்கும்படி கட்டளை யிட்டார்" என்றான்.

மச்சம் "அதென்ன கேள்வி கூறு?" என்றதே, அவன் "கடவுளை எப்போது எங்கே காணலாம்?" என்று வினவினான். அதற்கு அம்மச்சம் "அப்பா! நீ கேட்பது கடவுளைப் பற்றிய பரிசுத்த விஷயம். நான் இப்போது அசுத்தமாக விருக்கிறேன். நாளை காலை ஏழு மணிக்கு வருவாயாயின் நான் ஸ்நானம் செய்து சுத்தமாக விருப்பேன். அப்போது நீ கேட்ட கேள்விக்கு விடை யளிப்பேன்" என்று கூறியது.

இதைக்கேட்ட சீடன் மிக்க வியப்படைந்து "அடடா இதற்கென்ன பைத்தியமோ! எந்நேரமும் ஜலத்திலேயே யிருக்கிற இதற்குத் தீட்டு, அசுத்தம் எங்கிருந்து வந்தது? இது வேறெங்கும் போய் ஸ்நானம் செய்வது? என்று சிந்தித்தான். சிந்திக்கச்சிந்திக்க அவன் மனதிற் கலவரமே அதிகமாகிய தன்றி ஒன்றும் விளங்கவில்லை. பின்னர் அவன் அத்தகைய மகான் நம்மை வியர்த்தமாக இதனிடம் அனுப்பியிரார் என்று கருதி அம்மச்சத்தை நோக்கி,

"ஓமச்சமே! நீ கூறுவது மிக்க வியப்பாக விருக்கிறது. ஜலத்திலேயே பிறந்து ஜலத்திலேயே வசித்துக்கொண் டிருக்கும் உனக்குத் தீட்டும் அசுத்தமும் எப்படி யுண்டாயின? நீ யின்னும் வேறெங்குச் சென்று ஸ்நானம்செய்து சுத்தியடைவாய்? இவைகள் எனக்குச் சற்றும் புலப்படவில்லையே" என்றான்.

மச்சம்:—"ஆ உனக்கு அப்படியா புலப்படுகிறது? நான் கூறுவது இன்னும் மூடத்தன மாகவும் பைத்தியக்காரன் பேச்சு போலும் புலப்படுகிற தல்லவா? உண்மையாகக் கூறு?" என்றது.

சீடன்:—"ஆம். உண்மையே. உனக்கு மனவருத்த முண்டாகுமென்று நான் அப்படிக் கூறவில்லை" என்றான்.

மச்ச உருவாகவுள்ள அம்மகான்:—

"நீ கூறுவது நியாயமே. நீ என்னைக் கேட்கும் கேள்வியும் அத்தகைமைத்தே யாகும். முதலாவது, கடவுளை எப்போது காண லாம் என்கிறாய். கடவுளோ முன் எப்போதும் இருந்தவர், இப்போ தும் இருக்கிறவர், இனி எப்போதும் இருக்கப் போகிறவர். அதா வது முக்காலத்தும் அழியா திருப்பவர். அவர் நிலைமையில் அப் போது இப்போது, காலை மாலை என்ற காலவரையறை யொன்று மில்லை. அது இராப்பகலற்ற நிலை. ஆகையால் அவரை எந்தவேளை யிலுங் காணலாம்.

இனி எங்கே காணலாம் என்றனை யன்றோ! அவர் அங்கிங்கெ னாதபடி எங்கும் பிரகாசமாய், ஏகமாய், நீக்கமற மயிர்முனைக்குமிட மற மன்றிலெங்கும் நிறைந்து நிற்கும் பெருவெளியா யிருப்பவர். அவரே யாவற்றிற்கும் தாயகமாயிருப்பவர். நான் எப்படி ஜலத்தி லேயே பிறந்து ஜலத்திலேயே வசித்துக்கொண் டிருக்கிறேனென்று நீகூறினையோ, அவ்வாறே இந்த அண்டரண்ட சராசரங்களனைத்தும், (கடலிலேயே அலைதிவலை நுரையாதிகள் உதித்துக்கடலிலேயே இல யமாவதுபோல்) அவரிலேயேயுதித்து, அவரிலேயே யிருந்து, அவரி லேயே இலயமாகின்றன. அவரே சர்வத்திற்கும் ஆதாரமாக விரு ப்பவர். அவரையன்றி ஒரு அணுவிற்கு இருக்க வேறு இருப்பிட மில்லை. நான் ஜலத்திலேயே யிருந்து கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டு மென்று கூறியதைப் பைத்தியக்கார யோசனை யென்று நீ எப்படிக்கருதினையோ, அவ்வாறே நீகடவுளைஎங்குக்காணலாம்என்று கேட்கும் கேள்வியும் இருக்கிறது. நீ கேட்பது ஒருவன், "எனக்கு நா வுண்டோ இல்லையோ?" என்று கேட்பதுபோ லிருக்கிறது. "அக் கேள்வியைக்கேட்பதே நா" வென்று அறியாமல் மயங்கியே அவன் அவ்வாறு கேட்கிறான். கடவுள் உனக்குள்ளாகவே இருக்கிறார். நீ கடவுளுக் குள்ளாகவே யிருக்கிறாய். அவரைவிட்டு நீ ஒருவினாடியும் பிரிந்திருப்பதேயில்லை. அஞ்ஞான நிலையில் அவர் உனக்குள் மறைந் திருக்கிறார். அப்போது நீ "நான்" "நான்" என்று அகங்கரித்து அலைகிறாய். ஞான நிலையில் நீ அவரில் மறைந்து கலந்துவிட அவர் உன்னைத் தனக்குள் அயிக்கியப்படுத்திக் கொண்டு தானாகவே பிர காசிக்கிறார்." என்று கூறினார்.

சீடன்:—"ஓ மச்சமே! நீகூறியது உண்மையாகவே யிருக்குமென்று எனக்குப் புலப்படுகிறது. ஆனால் அது எனக்கு அனுபவமாக விளங்க வில்லையே" என்றான்.

மச்சம்:—"நான் கூறுவதைக் கவனமாகக் கேள். சூரியன் எங்கும் பிரகாசித்துக் கொண்டே யிருந்தாலும் குருடன் அதைக் காண்பதில்லை. அதுபோல் அஞ்ஞானம் என்பது உன் அறி

வாகிய கண்ணின்முன் ஒரு திரைவிடப் பட்டதுபோல் மறைத்துக் கொண்டேயிருக்கிறது. சூரிய கிரணங்கள் வெண்மை நிறம் பொருந்தினவை யாயினும், காமாலை என்ற வியாதியால் பிடிக்கப்பட்டவனது பார்வைக்கு மஞ்சள் நிறமாகத் தோன்றுகிறது. அதுபோல் மனமாகிய மாயையால் எங்கும் நிறைந்திருக்கும் சச்சிதானந்த சொரூபமே உனக்கு இந் நாறு பேதங்களையுடைய நாமரூபப் பிரபஞ்சமாகத் தோன்றுகிறது. மாயையொழிந்தால் சச்சிதானந்த சொரூப மாகிய பரம் பொருளை நீதரிசிப்பாய்" என்றது.

சீடன்:—"ஆ! மச்சமே! நீ இப்போது இவ்வுருவமாக விருந்தாலும் நீயே எனக்குக் குரு. இனி மாயையை யொழிக்கும் உபாயமும் அறிவிக்க நான் கோருகிறேன்" என்முன்.

உடனே மச்சரூபமாக விருந்த அம்மகான் அந்தரூபத்தை விட்டுச் சுயரூபத்தோடு சீடன்முன் நின்று "குழந்தாய்! உனக்குத் தக்க பக்குவம் வருவதற்காக நாம் இவ்வாறு செய்தோம். இப்போது மாயையை யொழிக்கும் வழியைக்கூறுகிறோம், மனதையலையவிடாது கேட்பாய். 'மனமாயையன்றி மற்றொன்றுமில்லை' என்றபடி மனமே மாயை, நீ அறிவை யூன்றிப் பார்ப்பாயாயின் இப்பிரபஞ்சம் மனதினின்றே யுதிக்கக் காண்பாய். மனமொடுங்கின் பிரபஞ்ச வாசனையுமொழியும். மனதிற்கு இச்சையே சொரூபம், நினைப்பே மூலம்; இச்சை யொழிந்தால் பிரபஞ்சத் தோற்ற மொழியும்; மனதின் இரஜோ தமோ குணங்கள் ஒழிந்தால் சத்துவமாகிய உள்ளம் களங்கமற்ற விடியற் காலை யாகாயம்போல் பிரகாசிக்கும்; அதைக்கொண்டு உன் சுயசொரூபத்தை நீ யறிவாயாகில், நீ யப்பரம்பொருளை விட்டன்னியமா யில்லை யென்பதையும், கடலிலுள்ள ஒரு துளிநீர்போல் அந்த அகண்ட பரிபூரண சொரூபத்தில் நீ யொரு அற்ப அம்சமாக இருக்கிரு யென்பதையும் அனுபவமாக அறிவாய். அந்த நிலையில் 'நான்' என்கிற கிஞ்சித் இருப்பையும் விட்டு விடுவாயாகில், தன்மை முன்னிலையென்ற பேதமொழிந்து, நினைப்பு மறப்பற்று நீயதுவாகி என்றுமழியாத பிறப்பிறப்பற்ற பிரம்மானந்த நிலையை யடைவாய். இதுவே முடிவான முத்திப்பேறுகும்." என்றருளினர்.

ஓம் தத்ஸத்.

---

## காலம் தவருமை.

எந்தெந்தக் காரியத்தை எந்தெந்தக்காலத்தில் செய்ய வேண்டுமோ, அதனைத் தவருமற் செய்வது காலந்தவருமையாகும். காலந்தவருமை என்பது இரண்டு வகைப்படும். குறித்த காரியத்தைக் குறித்த வேளையில் செய்

வதொன்று; மற்றென்று எந்தக் காலத்தில் எந்தக் காரியம் எதன் பின் செய்யவேண்டுமென்னும் ஒழுங்கு தவருமற் செய்வது.

குறித்த வேளையில், குறித்த காரியம் செய்வது "வேளை தவருமை" எனப்படும்; அஃதாவது, ஒரு காரியத்தைச் சரியான நாளில், சரியான நேரத்தில், சரியான நிமிஷத்தில், அதனை எப்பொழுது செய்யவேண்டுமோ, அப்பொழுது செய்வது அது ஆங்கிலத்தில் Punctuality என்று சொல்லப்படுகிறது.

எந்தக் காரியத்திற்குப்பிறகு எந்தக்காரியம் செய்யவேண்டுமோ, அதனைச் செய்வது, "ஒழுங்கு தவருமை" எனப்படும்; அஃதாவது காலா காலத்தில் தவருமல் இடையில் தடையேனும், தங்கலேனும் இல்லாமல், எதன் பின் எது என்னும் விதியை அனுசரித்து, ஒரே ஒழுங்காக வேலை செய்வது.

வேளை தவருமையும், ஒழுங்கு தவருமையும் சேர்ந்து "காலந்தவருமை" யாகும்.

காலம் என்பதை நேரம், சமயம், வேளை என்றும் அறிவுடையோர் கூறுவர். உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், குடியானவர்கள் ஆகிய இவர்கள் எல்லோரும்காலத்தைக் கவனித்து அதன்படியே நடக்கவேண்டியவர்களாயிருக்கிருர்கள். உத்தியோகஸ்தன் எந்தக்காலத்தில் எவ்விதமாகநடந்தால் தன்னுடைய எஜமானர்கள் சந்தோஷமடைந்துதனக்குநன்மை செய்வார்களென்பதையும், வியாபாரி காலா காலத்தில் சரக்குகளைத் தருவித்து, காலத்திற்கேற்ற சாமான்களையே விற்று லாப மடையவேண்டு மென்பதையும் உணரவேண்டியவர்க ளாகிருர்கள். விவசாயி எந்தக்காலத்தில் எந்தப் பயிரைப்பயிரிடவேண்டு மென்பதை அறியவேண்டும். இது பற்றியே "பருவத்தே பயிர் செய்" என்பது கூறப்பட்டிருக்கிறது.

முக்கியமாய் மனிதர் "காலந்தவருமை" யென்னும் சிறந்தகுணத்தை வீணில் கழித்துவிடாமல் கசடறக்கற்று சான்றோர்களாகவேண்டும். இதை யறிந்தே நமதுமூதோர் "இளமையிற் கல்" என்றுசொல்லியிருக்கிருர்கள்.

வேளைதவருத வழக்கத்தையும், ஒழுங்கு தவருத வழக்கத்தையும் மாணவர்கள் பள்ளிக்கூடத்திலேயே கற்காவிட்டால், அவர்கள், வயதுவந்த பிறகு உலகில் இல்லறத்தில் ஒழுகும் பொழுது, யோக்கியதை இல்லாதவர்களென்று பலரால் நினைக்கப்படுவார்கள். காலத்தினருமையை உணர்ந்து அவ்வச்சமயங்களில் செய்யவேண்டியவற்றைச் செய்யாமல் வீணே காலத்தைக் கழிப்பவர்களே சோம்பேறிகள் என்று அறிஞரால் கூறப்படுவார்கள்.

அப்படிப்பட்டவர்களுக்குத் தொழிலாளிகளும், உத்தியோகஸ்தர்களும், மற்ற எவரும் வேலைகொடுக்கமாட்டார்கள். சோம்பேறிகளான வேலைக்காரர்கள் தங்கள் இஷ்டப்படி நேரங்கழித்து வந்து வேலை செய்கிற வரையில் யஜமானன் வேலை செய்யாமல் யந்திரங்களை நிறுத்தி வைத்திருக்கலாமா? ஐயர் வருகிற வரையில் அமாவாசை காத்திருக்குமா? காலமும், வேளையும் மனிதனுடைய அனுகூலத்தை அனுசரித்துக் காத்திரா!

காலந்தவருமை என்பதை நாம் கற்றுக்கொள்ளவேண்டுமாளுல், ஆகாயத்தின் கண் உள்ள சந்திர சூரியர்களையும், பூமியின் கண் உள்ள மரங்களையும் பார்த்து வருவோமாளுல் கற்றுக்கொள்ளலாம். எப்படியெனில்

சந்திர சூரியர்கள் உதிக்கவேண்டிய காலத்தில் உதித்து, அஸ்தமிக்க வேண்டியகாலத்தில் அஸ்தமிக்கிறார்கள். தவிர, மரங்கள், தங்களுடைய இலைகளை உதிர்த்துக்கொள்கிற காலத்தில் உதிர்த்துத் தளிர்க்கவேண்டிய காலத்தில் தளிர்க்கின்றன.

ஆகையால் நாமும் "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்" என்னும் பழமொழியை மனதில் வைத்து, எந்தெந்தக்காரியத்தை எந்தெந்தக் காலத்தில் செய்துகொள்ள வேண்டுமோ, அந்தந்தக் காலத்தில் செய்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நாம் பின்னால் கஷ்டப்படுவோம். எப்படியெனில் காற்று அடிக்குஞ் சமயத்தில் தானியத்திலுள்ள, குப்பை, கூளங்களை நீக்காவிட்டால், பிறகு அவைகளை நீக்குவதென்றால் கஷ்டமாகுமல்லவா ? அதுபோல் நாமும் வேளையைத் தவறவிட்டால், கஷ்டப்படுவோம் என்பதாம்.

காலம் செய்வது ஞாலம் செய்யா.

K. இரங்கையன்,
காரமடை.

---

## பிரணவம்.

சகோதர சகோதரிகாள் !

பூர்வத்தில் நாம் செய்த புண்ணியத்தால் நமது அஞ்ஞானத்தையோட்டி மெய்ஞ்ஞானத்தைப் போதிக்கத் திகழ்ந்துலவிவரும் ஆனந்தபோதினியின் கண் மேற்கண்ட தலைப்பை யொட்டி சில விஷயங்களை எழுதத் துணிந்த நான் சுவை மொழி புணர்த்திச் சொல்லும் சொன்னயப்பான்மையனல்லன். என்னிற்பிழைகளோ பெருமலை போலத்தோன்றும். எனினும் நீவிரனைவரும் கல்வி கேள்விகளால் நிறைந்த குடமா யிருக்கிற படியாலும், 'நல்லார் பிறர் குற்றம் நாடார்' என்பதை மறக்கவில்லை என்ற எண்ணம் தூண்டுதலினாலும் நான் இதை வரையத் துணிந்தேன்.

ஐயன்மீர் !

பிரணவம் என்னும் சொல் துதித்தல் என்ற "நு" என்னும் தாதுவிலிருந்து தோத்திரம் என்ற பொருளில் "நவ:" என்ற சொல்லுண்டாக அதனோடு "ப்ர" என்னும் உபசர்க்கத்தைச் சேர்க்க மவ்வீறுங் கொண்டு அமைந்துள்ளது பிரணவம். பிரணவமானது மூலமொழி எனவும், தனிமொழி எனவும், ஓங்காரம் எனவும், குடிலை எனவும் படும்.

ஓம் என்கிற எழுத்தினால் விளங்குகின்ற தெதுவோ அதுவே சிவம். சகலரும் இதைத் தான் உபாசிக்கின்றனர்.

ஓம் என்கிற பிரணவாக்ஷரம் பார்வைக்கு வலம்புரிச் சங்கு வடிவினதாகவும் செவிப்புலனிற்கு ஒரே எழுத்தாகவும் தோன்றினும், அதில் அகாரம், உகாரம், மகாரம் என்னும் மூன்றெழுத்துக்க ளடங்கி யிருக்கின்றன. ஆகவே, இப்பிரணவம் சமஷ்டிப் பிரணவம் வியஷ்டிப் பிரணவம் என இரு வகைப்படும். ஓம் என்பது சமஷ்டிப் பிரணவம். அகார உகார மகாரமென நிற்பது வியஷ்டிப் பிரணவம். சமஷ்டி தொகுத்துச் சொல்வது; தோட்டம் என்பது போல. வியஷ்டி பகுத்துச்சொல்வது; வாழை, கமுகு, தென்னை என்பன போல.

இங்ஙனம் பிரணவம் மூன்றெழுத்தாக விரிந்தும், அம்மூன்றையும் தொகுத்து ஓம் என உச்சரிக்கப் படும்பொழுது நாதமாயும், அது ஓம் என எழுதப் படும் பொழுது விந்துவாயும் இருப்பதால் முதல் மூன்றெழுத்தும் அந்த நாதவிந்துக்களாகிய ஒலி வடிவும் வரி வடிவுங் கூடி ஐந்தெழுத்தா யிற்று. இப்பிரணவத்தின் வரி வடிவு,

"பிரதமம் தாரகாகாரம் த்வீதியம் தண்டமுச்சியதே
த்ருதீயங் குண்டலாகாரம் சதுர்த்தங் அர்த்த சந்த்ரகம்
பஞ்சமம் பிந்துசையுக்தம் பிரணவம் பஞ்சலக்ஷணம்".

எனக்காமிகாகமத்தில் சொல்லப்பட்டது.

அதாவது முதல் நக்ஷத்திர வடிவமும், இரண்டாவது தண்ட வடிவ மும், மூன்றாவது வட்ட வடிவும், நான்காவது அர்த்தச் சந்திர வடிவும், ஐந் தாவது பிந்துவோடுங் கூடின வடிவுமாகிய ஐந்திலக்கணங்க ளுடையது பிரணவம் என்று பெறப்பட்டது.

அபரப் பிரணவம் வாசகமான சப்தரூபமாகிப் பிரம, விஷ்ணு, ருத் திர, மஹேசுவர, சதா சிவ அதிதேவதைகளான, சுக்கில, கிருஷ்ண, ரத்த, ஜோதி, ஸ்படிகம் என்னும் பஞ்சவர்னக் கிரமமுள்ள அகார, உகார மகார பிந்து நாதம் என்னும் பஞ்சாக்ஷராத் மகத்துவத்தின் தாரக தண்டக குண் டலாகார அர்த்த சந்திராகார சோதியாகார மென்னும் ரூபத்தினால் ஓங் காரம் என்றும் சிவாத்மகம் என்றும் பற்பல பரியாய நாமங்களுள்ளதாயிரு க்கும். நான்கு அமிசங்களும் நான்கு வேதங்களாம். முதலமிசம் அகாரம். இரண்டாம் அமிசம் உகாரம். மூன்றாம் அமிசம் மகாரம். நான்காம் அமிசம் அர்த்த மாத்திரையாகிய மிகச் சூக்குமமான நாதரூபம். இவற்றுள் முதல் மூன்று அமிசங்களும் முறையே பிரமன், விஷ்ணு, உருத்திரனைக்குறிக்கும் நான்காம் அமிசம் இவை மூன்றிற்கும் காரணமான சிவபரஞ்சுடரைக் குறிக் கின்றது.

சிவரூபமானது பிரம,விஷ்ணு, ருத்ராதீத துரியாகாரமாயும், சர்வவித பொருட் பிரபஞ்சங்கட்கும் காரணமாயும் நிற்றல்போல், சிவமந்திர மான பிரணவமும் நான்காக நின்று சர்வ சொற் பிரபஞ்சங்களுக்குங் காரணமாய் சிவத்துடனே அபேதத்தை யடைகின்றது. அடையவே, வாச்சியமான சிவ த்துக்கும் வாசகமான பிரணவத்துக்கும் பேதமேயில்லை. ஆதலால் சிவமே பிரணவம், பிரணவமே சிவம் என்பது சர்வவேத வேதாந்த சம்மதம். இவ் வுண்மையைப் பிரகாசிப்பிக்கத்தான் தாயுமான சுவாமிகள்,

"தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே" என்றார். திராவி டோபநிடதமாகிய திருவாசகம் "உய்ய என்னுள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற மெய்யா" என உபதேசிக்கின்றது. இனி உலகத்திலுள்ள சகல பாஷைகளின் உயிரெழுத்துக்களை யெல்லாம் தக்கபடி பரிசோதித்துப் பார்ப்போமாகில்

"அகரமுத லெழுத் தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு"

என்னும் திருக்குறள் மொழியே சத்தியமாம் என்பது நன்குவிளங்கும்.

பிரபஞ்சத்தில் மக்கள் பிறந்தவுடனே இயற்கையாக உச்சரிப்பது அ-உ-உங்-என்பவைகளே. குழந்தைகள் பசித்தபோது அழும் சத்தமும்

அங்கா ! உங்கா ! என்னும் ஓங்காரசத்தமே. அக்குழந்தைகளுக்கு வருத்தம் உண்டாகும் போது அம்-உம்-ஓம் - என்றே உச்சரிக்கின்றன. சந்தோஷ முண்டாகும்போது ஏற்படுவனஓம் என்றதின்திரிபான உச்சரிப்புக்களே. ஆகவே மக்கள்பிறந்ததுமுதல் இறக்கும்வரையில் உச்சரிக்கும்வார்த்தைகள் ஓங்காரமே. இந்த ஓங்காரசத்தம் பிரபஞ்சவெளிப் பொருள்களிலும் காணப் படுவது பிரத்தியக்ஷம். எங்ஙனமெனின் வெண்கலம் இரும்பு முதலானவை கள் ஒன்றோடொன்று தாக்கும்போது உண்டாகும் சத்தத்தைக் கவனித் தால் அது ஓங்காரத்தின் சத்தமேயாகும். பெருங்கடலினின் றெழும் பேர லைகளின் சத்தத்தைக்கவனிப்போமாயின் அதுவும் ஓங்கார சத்தமேயாகும். சண்டமாருதத்தைக் கவனித்துக்கேட்போமாயின் அங்கும் ஓங்காரசத்தமே யாகும். விறகுக் கட்டுகள் தீயிற் கலந்தெரியும் போதும், தண்ணீர் தீயிற் கொதிக்கும்போதும் உண்டாகும் சத்தத்தைக் கவனிப்போமாயின் அங் கெழுவதும் ஓங்கார சத்தமேயாகும். வண்டுகள் முதலிய நாலுவித பூச்சி களின் சத்தங்களைக் கவனிப்போமாகில் அவைகளும் ஓங்கார சத்தத்தின் திரிபேயாகும். அனைவர்க்கும் ஆனந்தத்தை விளைவிக்கும் சங்கீதத்தின் உற் பத்தியைப்பற்றிப் பரிசோதிப்போ மாகில் அதுவும் ஓங்காரத்தினின்றே உற்பத்தியாயினமை நன்குவிளங்கும். ஆகவேயாவும் ஓங்காரத்தையே ஆதா ரமாகக் கொண்டிருக்கின்றன.

இத்துணைப் பிரணவம் அகாரமாய் வாய்திறத்தலினாலாகி, உகாரமாய் இதழ் குவிதலினாலே நின்று, மகாரமாய் வாய்மூடுவதனால் ஒடுங்கி நின் றமையால் எல்லாவுலகங்களும் எல்லாச் சுருதிகளும் அப்பிரணவத்திலே தோன்றி நின்று ஒடுங்குமென்பது துணியப்பட்டது. பிழையுளவேல் ஆன் றோர் பொறுக்க.

V. R. வேணுகோபால் பிள்ளை,
செங்காலணிமேடு, வாயலூர்.

**குறிப்பு** :—அ, உ, ம, அர்த்தமாத்திரை, அ என்ற மாத்திரை ஆகிய ஐந்து மடங்கிய பிரணவமே பஞ்சாக்ஷரமுமாகும். இப்பிரணவமே மற்றெல் லா மந்திரங்களுக்கும் உயிர் போன்றது. பிரணவமே பஞ்சாக்ஷர மாதலின் பஞ்சாக்ஷரத்தை மட்டும் பிரணவமின்றியே சபிக்கலா மென்றும், மற்றைய எல்லா மந்திரங்களையும் பிரணவத்தோடு சேர்த்துச் சபித்தாலே பய னுண்டென்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்த அண்ட ரண்ட சரா சரங்கள் யாவுமே பிரணவத்தினின் றுற்பத்தியாயின என்பது விளங்க மேலே கூறப்பட்ட பிரணவத்தின் ஐந்து பிரிவுகளிலு மிருந்து பஞ்ச பூதங்களும் அவற்றினின்று தநுகரண புவன போகங்க ளியாவும் உற்பத்தியாயின வெனக் கூறப்பட்டிருக்கிறது. விவரம் தக்கநூல்களில் பார்த்து அல்லது ஆன்றோர்கள்பால் கேட்டுணர்க.

பத்திரிகாசிரியர்.

---

## இல்லறம்—விவாகம்.

(29-ம் பக்கத்தொடர்ச்சி)

இகம் பரம் என்பன விரண்டும் ஒன்றோ டொன்று மாறுபட்டு நிற் பன. இகலோக வாழ்வினையே பெரிதாக மதித்திருப்போர்களுக்குப் பர லோக போக இச்சை விரோதம் செய்யும். அங்ஙனே பரலோக வாழ்வுக்கு இகலோக வாழ்வு விரோதம் செய்யும். இகலோகத்தில் கர்ம தர்மானுஷ்

டானங்களை யொழுங்காகச் செய்தாலன்றிப் பரலோக வாழ்வு சித்திப்ப தருமை. பரலோகங்களில் சிறந்து வாழ்ந்தாலன்றி மறுபடி நல்ல ஜன்மங் கிடைப்பதருமை. ஏனென்றால் பரலோக வாழ்வுக் குரிய புண்ணிய பாவ சேஷங்களாலேயே உயர்வுந் தாழ்வுமான ஜன்மங்கள் கிடைக்கின்றன; புண்ணிய சேஷத்தால் உயர்ந்தபிறவிகளையும் பாவசேஷத்தால் பசு பட்சி தாவரங்களாதி ஈன ஜன்மங்களையும் ஜீவாத்மாக்க ளடைகின்றன என்று வைதிக நூல்களெல்லாங் கூறுகின்றன.

"வேதக ஞோதிய வேத விதிக்கே
சாதகர் வானவர் தம்பதிபுக்கே
மோதந ராயதன் வாழ்வு முடித்தே
வேதிய ராவர்கண் மேதினி மீதே.

முன்னைய நல்வினை வாதனை மூளத்
துன்னுவர் நூல்விதி யான தொடர்ந்தே
யென்னிலர் மண்மிசை நல்வள மீயத்
தன்னிக ரில்லிதன் ஞானை தரித்தே."

முற்றுவர் நல்வினை முற்றிய பின்னர்ப்
பற்றுவர் வானுய ரும்பதி பற்றித்
துற்றுவர் போக விதம்பல துற்றிப்
பற்றுவர் பற்றற வீசனற் பாதம்."

என்ற பிரமாண வசனங்களால், வேதநாயகனாகிய சர்வேசுவரனாலரு ளிச் செய்யப்பட்ட வைதிக விதிகளை யனுசரித்து நடப்பவர்கள் தேவ லோகம் சென்று ஆநந்த முடையவர்களாய் அங்குள்ள போகங்களை நுகர் ந்து, அவை முடிந்த பின் பூலோகத்தில் மானிட வகுப்பில் வேதியராதி உயர் வகுப்பினராய்ப் பிறப்பார்கள். அப்போது பூர்வஜன்ம கன்ம வாசனை யால் வேத விதிகளை யனுசரித்துச் சன்மார்க்கத்தி லொழுகிச் சகல ஐசு வரியங்களையு மீசனருளாற்பெற்றுச் சிறந்து வாழ்ந்து ஆனந்த முறுவார்கள். அவர்கள் எடுக்கும் ஜன்மந்தோறு மிப்படியே வைதிகாநுஷ்டானம்செய்து, சொர்க்கத்துக்கு மேலான பிரம விஷ்ணு ருத்திரர்களுடைய பதவிகளை யடைந்து அங்கங்குள்ள இன்பங்களை நுகர்ந்து, பின் அந்தப் போகங்களில் வெறுப்புண்டாக, அது காரணமாக மீளாப்பதியாகிய மோட்சமடைவார் கள் என்றும்,

"ஈட்டினர் பாவ பேத மிரக்கமி லியமதூதர்
கூட்டிய நரக பேதக் குழிவிழுந் தழுங்கி யாழ்ந்து
மீட்டும ணிழிந்த யோனி விதமெலாம் விரவி முன்ன
மீட்டிய வாத்தினூலு நார்தனு வெடுக்கும் போதும்

* * * * *

வஞ்சக மனத்தராயும் வாக்கினை யிழந்தோ ராயுஞ்
செஞ்சொலைக் கேட்டு மற்றைச் செவியினை யிழந்தா ராயுந்
தஞ்செயற் கிசையவாணை வழியினிற் சரிப்பர் தாமே."

எனப் போந்த பிரமாணங்களால் பாவங்களைச்செய்தவர்கள் எமதூதர் களால் தள்ளப்பட்ட நரகக் குழிகளில் விழுந்து அழுந்திக் கிடந்து, மறுபடி

யும் பூமியில் வந்து பலவிதமான ஈன சரீரங்களை யெடுப்பார்கள். அந்த ஜன்மங்களில் ஏதேனும் சிறிது புண்ணியம் செய்திருந்தார்களானால், அது காரணமாக மானிட ஜன்மத்தையு மடைவார்கள். அடைந்தாலும் வஞ்சக நெஞ்ச முடையவர்களாயும், ஊமைகளாயும், செவிடர்களாயும், கண்முதலிய அவயவப் பழுதுடையவர்களாயும்,கொடியவியாதியாற் பீடிக்கப் படுகிறவர்களாயு மிருந்து வருந்துவார்கள். இப்படியே பல வகையான தாழ்ந்த பிறவிகளை யெடுத்து அலைந்துகொண்டே யிருப்பார்கள் என்றும் பெறப்பட்டது காண்க. அன்றியும்,

"அறைந்த வதிபா தகமாதி யடைந்தா ரியம னுலகதனைச்
செறிந்து சிவந்த விழிகண்டு சித்தங் கலங்கிச் செயலழிந்து
பிறிந்து புணர்ந்து பிலவழியைப் பிடித்துத் தூத ரடித்தெறிய
மறிந்து நிரயக் குழி வீழ்ந்து வருந்தும் விதத்தை வகுப்பதன்முன்.

அறிகமுனிவ வறம் புரிந்தா ரவரு மியம னுலகதனை
நெறியிற் றரும பலனிகழ நீடு மகிழ்ச்சி கூடியிடச்
செறியு முறையு மவர்க்கவனுஞ் செய்யுஞ் சிறப்புந் துறக்கத்தி
னுறையு முறையுந் தொகைசெய்தே யுரைப்பா முலக முவப்புறவே."

என்ற ஆப்த வசனங்களால் மஹாபாதகங்களைச் செய்த பாவிகள் எமலோகம் போய், அங்கே கோபத்தினாலே சிவந்திருக்கிற எமனுடைய குரூரமாகிய திருஷ்டியைப் பார்த்து மனங்கலங்கி, யாதொன்றுஞ் செய்ய முடியாதவர்களாய் நடுங்கி நின்று, பின் எமனுடைய கட்டளையால் தூதர்கள் பிடித்துத் தள்ளத் தலைகீழாக நரகக் குழியில் விழுந்து வருந்துவார்கள். புண்ணியஞ் செய்தவர்களும் மனமகிழ்ச்சியுடன் எமலோகம்சென்று அந்த எமதர்மராஜனுடைய மலர்ந்த சௌந்தரியமான முகத்தைத் தரிசிப்பார்கள். எமன் அவர்களுக்கு உபசாரஞ் செய்து சொர்க்கத்துக்கு அனுப்புவான் என்றும் பெறப்பட்டது.

"புரிந்துளார் பாவ முன்னும் புக்குமா நிரய மீண்டு
மிருந்தவா தனையி னாலே யியற்றுவர் பாவம் பின்னும்
விரிந்திடு மனேக கோடி விதமுறப் பாவ மெல்லாந்
தெரிந்திடிற் றூல மாதி திரிவித மாகிச் சேரும்."

என்றதனால் ஒரு ஜன்மத்தினாற் பாவம் புரிந்தவர்கள் நரகம் புகுந்து, அந்தப் பாவத்தின் பயனாகிய துன்பத்தை நுகர்ந்து, அந்தப் பாவ சேஷமாகிய வாசனா பலத்தினால் மறுபடியும் பூமியிற் பிறந்து அளவில்லாத பாவங்களையே மேலுமேலுஞ் செய்வார்கள் என்று பெறப்பட்டது. இந்தப் பிரமாணங்களால் முன் ஜன்மத்தில் செய்த பாவத்தினால் நரக மெய்தினோர் மறு ஜன்மத்தினால் வாசனா பலத்தினாலே இழிந்த ஜன்மங்களை யடைந்து நரகமே யடைவார்கள் என்றும், புண்ணியஞ் செய்தவர்கள் சொர்க்கத்தி லின்பநுகர்ந்து, மீண்டும் பூமியில் உயர்ந்த குலத்தில் பிறந்து, அந்த வாசனா பலத்தினால் மேலு மேலும் புண்ணிய கன்மங்களையே செய்து கடைசியில் மோட்சத்தை யடைவார்களென்றும் நன்கு புலப்படுகின்றது. இதிற் கண்ட படியே புண்ணிய கன்மங்களைச் செய்ய மனம் ஒருமைப்பட வேண்டும். அங்ஙன மொருப்படுதலுக்குத் தெய்வ சகாயம்வேண்

டும். அதை யடைவதற்குத் தெய்வத்தி னிடத்தில் மனமொழிமெய்களால் பத்தி செலுத்த வேண்டும். அந்தப் பக்திக்குச் சகுண பாவனையே சிறந்தது. அந்தச் சகுண பாவனையே பெண்களுக்குப் பதி பக்தியாம். அந்தப் பக்தியை யுபதேசிப்பதே யாம் கூறிய விவாகத்தின் பயனும்.

பதி பக்தியே தெய்வாராதனையாம். சாணத்திலும் மண்ணிலும் கல்லிலும் உலோகங்களிலும் ஆவிர்ப்பவித்து அன்பர்க்கு அனுக்கிரகம் செய்யும் பரம் பொருள் சேதனனாகிய மனிதனிடத்தில் எளிதிற் பயன் படும். அது பற்றியே ஆடவர் மகளி ரிருவருக்கும் மனிதனாகிய குரு சொரூபத்தைத் தியானித்துச் சிந்தித்து வழிபட விதிக்கப்பட்டது. அந்தக் குருவடிவமே சகுண தெய்வ வடிவமாம். இவ்வாறு சதிபதிகள் இருவருந் தத்தங் குருவடிவான தெய்வத்தை யாராதனை செய்யவேண்டு மென்பதே ஆரி யோத்தமர் கண்டு பிடித்த சன்மார்க்கமாம். முன் சரீர வியல்பிற் கூறியபடியே பெண்களுடைய சரீரத்தில் உதர பேதமாகிய இரஜஸ் அதிக அளவினையுடையதா யிருக்குமென்றும், அது பேதைப் பருவங் கடந்த பொழுது சிரசினின்றும் மனோவேக மென்ற நாடியின் வழியே கீழ் நோக்கி யிறங்குமென்றும், அப்போது முகத்தில் பளபளப்பு முதலிய அழகும் வசீகர சக்தியு முண்டா மென்பதும், அது மார்பி னிடத்திலுள்ள இரண்டு பைகளை நிரப்பி அதனைப் பூரிக்கச் செய்து பின் கீழ் நோக்கிச் செல்லும் என்பதும், அது செல்வதற்கு அடையாளம் அது செல்லும் மார்க்கத்தில் உரோமம் வளரும் என்பதும், அதுவே ரோம ரேகை யென்று பண்டிதர்களாற் புகழ்ந்து வர்ணிக்கப்படு மென்பதும், கர்ப்பாசயத்தில் பிரவேசித்து அதைப் பூரிக்கச் செய்து அதன் வாயிலைத் திறந்து பின் வெளிப்படு மென்பதும், அதனையே இருது என்று கூறுவது என்பதும் ஈண்டு பயன் படுத்தத் தக்கது; இவ்வாறு வெளிப்படுதற்கு, எட்டு வயது முதல் பதின்மூன்று வயது வரையுமாகிய ஆறு வருஷங்களாகும். ஏழு எட்டு ஆகிய இரண்டு வருடங்களும் பெண்களுக்குப் பேதைப் பருவமென்று கூறப்படும். ஏனென்றால் உலக வழக்கு இன்னது என்று அறியாமலே, புருஷன் பெண்சாதியாகத் தானுமிருக்க வேண்டு மென்கிற கருத்து முண்டாகும். அப்பருவத்தில் பெண்ணின் மனம் களங்க மற்றதாயும், கபட மற்றதாயும், பரிசுத்தமானதாயும், காரணம் தெரியாமலே, மற்றைய மங்கை மடந்தைப் பருவத்தினரைப் போலவே தானும் நாயகனுடன் கூடி வாழவேண்டு மென்கிற ஒரே எண்ண முண்டாகும் பருவம் அப்பருவமாதலால், அதுவே தன் பதியாங்குரு நாயகனை யடைதற்குரிய பருவமாம். உலக வழக்கு அறிந்தும் அறியாமலு மிருக்குங்கால மாதலால் அதனைப் பேதைப் பருவமென்று கூறினர். "உலா" என்னும் பிரபந்தங்களில் பெண்களின் எழு பருவ விலக்கணம் நன்கு விளக்கப்பட் டிருப்பது காண்க.

களங்க மற்றதாயும், வேறு சொரூப சிந்தனை யில்லாததாயு மிருக்கிற பருவத்தில் தனக்கென ஏற்பட்ட நாயகனிடத்தில் அதிக அன்பும் பயமும் விசுவாசமும் இயல்பாகவே ஜனிக்கும். அப்போது தன் நாயகனுடைய சொரூபம் நன்றாய்ப் படியும்; பசுமரத் தாணி போல் நிலை பெறும். அது வயது ஏற ஏற மனமாதிக்கருவிகள் உறுதி பெறும்போது இதுவும் உறுதிப்படும். வேறிடத்தில் சித்தம் நாடாது. தன் நாயகனிடத்திலேயே மனம் நிலைபெறும். பெறவே மன மொருமைப் பட்டதாம். படவே பரம யோகி

களாற் சாதிக்கப்படும் மனவடக்க மென்பது சித்திக்கும். இந்த மனவடக்கம் பெற்ற பெண் தன் புருடனுக்குச் செய்யும் பணிவிடைகளெல்லாம் தெய்வாராதனையாகவே முடியும். இத்தன்மை வாய்ந்த மனைவியிடத்தில் நாயகனுக்கும் கரை கடந்த அன்பும் ஆசையு முண்டாம். அப்போது இருவர் மனமும் ஒரே மனமாகும். இவ்வாறு ஒருமைப்பட்ட மனத்துடன் சதிபதிக ளிருவருங் கூடிச் செய்யும் கருமங்க ளெல்லாம் சித்தி பெறும்.

அநசூயை துவாதச வருஷக்ஷாமத்தில் தன் ஆசிரமத்தில் வளங்குன்றுதிருக்கும்படி மேகங்களை யுண்டாக்கி மாத மும்மாரி பெய்யும்படி செய்ததும், நளாயினி சூரிய னுதியாம லிருக்கும்படி சபித்ததும், தமயந்தி வேடனைச் சாம்பலாம்படி யெரித்ததும், சாவித்திரி இயமனைவென்று தன் கணவனை மீட்டதும், அக்கினி தேவனுடைய மனைவி அருந்ததியின் சொரூபத்தை அடைய முடியாமற் செய்ததும், சந்திரமதி காட்டுத்தீயை அணைத்துச் சென்றதும், சீதையும் திரௌபதியும் பகைவரை வென்று சீர்பெற்றதும்,இன்னம் கூறப்படும் கற்புடைய அற்புத வனிதையரின் மகிமைகளும் இந்த மாதிரியான தெய்வ ஆராதனையால்தான் உண்டாயின. சரியான நெறியில் நடக்கும் மனத்திண்மை யுடைமை மாதா பிதாக்களின் உபதேச மகிமையாலும் இதுண்டாகும். இதுக்ஷத்திரிய வைசியராதி யோர்க்கேயாம். இதன் பிரிவு ஊகித் துணரக் கூடியதாம். இத்தகைய விவாகத்தால் ஒருமைப்பட்ட தம்பதிகளே சகல கருமங்களையு மியற்றவும் இகபர மோட்ச வாழ்வுகளைப் பெறவும் தக்கவர்களாவர்.

வதூவரர் இருவரும் தாமே மனமொத்துக் கலப்பதாகிய ஓர் விவாகம் கேட்கப் படுகின்றது. அது காந்தர்வ விவாகத்தி லடங்கும். கந்தர்வர் என்பவர் தேவஜாதியில் ஒரு கூட்டத்தார். அச்சாதியில் கொள்வாரும் கொடுப்பாரு மின்றி வதூவரர் இருவரும் மனமொத்துக் கலப்பதுவழக்கம். அப்படி யிருந்தாலும் அவர் ஜாதியிலும் பிராம்ம விவாகமே சிலாக்கியமென்று கொண்டு, முறைப்படி நடத்தப்படுவதை நூல்களாற் காண்கிறோம். இந்த விவாகம் பூவுலகில் க்ஷத்திரியரால் அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. யாதாவதோர் காரணத்தால் தன் கூட்டத்தாரை விட்டுப் பிரிந்து வந்த பெண்ணும், அவ்வாறு வந்த பிள்ளையும் கண்ட மாத்திரத்திலேயே காதல் வசப்பட்டவர்களாய் இருவரும் மனமொத்துக் கலப்பதும் காந்தர்வ முறையாம். இதனைத் தெய்வப் புணர்ச்சியென்பர். இங்ஙனம் கூடிய இவர்களும் பிறகு அக்கினிசாட்சியாக விதிப்படி மணம்புரிந்து கொள்ள வேண்டியவர்களே.

இதையன்றி மாதாபிதாக்களின் உதவியின்றிப் பெண்ணும் பிள்ளையும் ஒருவரோ டொருவர் தத்தம் காதலைக் கூறி யிருவரும் சம்மதப்பட்டு மணம்புரிவதுமோர் வழக்கம். அது இக்காலத்தில் அந்நிய நாட்டாரால் கொண்டாடப்பட்டு வருகின்றது. இது வைதீகர் கூறும் எண்வகை மணங்களில் சம்பந்தப்படாத ஓர் முறை. இதில் அநேக கெடுதிகளுள. அவைகளைப்பற்றி நாம் ஈண்டுக்கூறுவது அவசியமன்று. அம்முறை வைதீகர்களாகிய நமக்குத்தகாது என்பது மாத்திரமே யீண்டு நாம் கூறத்தக்கது.

நாம் முற்கூறியவை யெல்லாம் பாவபுண்ணிய கன்மங்க ளுண்டென்றும், அவற்றின் பயனை யனுபவிக்க நரகசொர்க்கங்க ளுளவென்றும், அது காரணமாக மாறிமாறிப் பற்பல வகையான ஜன்மங்களை ஜீவாத்மாக்களடையு மென்றும், இவற்றை யெல்லாம் கூட்டுவிக்க ஒரு தெய்வ முண்டென்றும் வேதாதிகள் கூறும் பிரமாணங்களை நம்பியே யேற்படுத்தப் பட்டன. யோகசித்தியால் சர்வாண்டங்களையு மிருந்த விடத்திலிருந்தே யுணரும் பரமசக்திவாய்ந்த நமது முன்னோர்கள் தமது பேரறிவால் கண்டறிந்து யாவும் கூறினார்கள். இதனை ஒப்பியே நித்திய நைமித்திக காம்ய கர்மங்கள் எற்பட்டன. கிரமப்படி விவாகசம்பந்தம்பெற்ற புருஷன் மேற்குறித்த மூவகைக் கன்மங்களையும் செய்யத் தக்கவன். இவற்றுள் நித்தியகன்மமே விடாது செய்யத்தக்கது. நைமித்திகம் ஒரு நிமித்தம்பற்றிச் செய்வதால் அது ஏனையவற்றுக்குப் பயன்படாது. காமிய கர்மம் சொர்க்காதி புவனங்களையும் இகலோக வாழ்வையும் உத்தேசித்துச் செய்வதால் அதுவும் அவ்வளவு சிறந்ததன்று. அது கருதிய பயனைமாத்திரம் கொடுத்து ஒழியும். நித்தியகன்மமோ அவ்வாறன்றி மோட்சத்துக்குச் சாதகமானதால் அதை விடாது செய்யவேண்டும். அது சந்தியோபாசனை, அக்கினி ஆராதனை வேள்விகளாதியன. தானம் கொடுப்பதும் காமியத்திலேயே யடங்கும். ஆயினும் அர்த்தோதயம் மகோதயம் கிரகண புண்ணியகாலம் இவற்றில் செய்யப்படும் கர்மங்கள் அனந்த பலனைத் தருமாதலால் இக்காலத்தில் தேவபிதுர் தர்ப்பணங்களைச் செய்து, சற்பாத்திரத்தில் தானம் செய்வது தகுதியுடையது. அர்த்தோதயமாவது தைமாதம் ஞாயிற்றுக்கிழமை அமாவாசை திருவோண நட்சத்திரம் மூன்றுங் கூடியகாலம். இது திங்கட்கிழமையில் நேர்ந்தால் மகோதயம். இத்தினங்களில் உதயகாலத்தில்புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, சற்பாத்திரத்தில் தன்னா லியன்றதைத் தானம்செய்வது கிரகஸ்தர்களுக்குப் பெரும்பயனைத் தருமென்று நூல்கள் கூறுகின்றன. இப்புண்ணியகாலம் பலவருஷங்களுக் கொருமுறை உண்டாகக்கூடியது. இம்மூன்றும் அடிக்கடி கூடிவருவது கிடையாது. ஆதலால் மறுமையை உத்தேசித்த கிரகஸ்தன் இந்தப் புண்ணிய தினங்களில் விதிப்படி தானங்களைச் செய்யவேண்டும். தினந்தோறுந் தானம்செய்வதை முன்னரே கூறினோம். இனிக்கிரகண புண்ணியகாலத்தைப்பற்றிச் சிறிது கூறுவாம். (இன்னும்வரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## கைவல்ய நவநீத வசனம்

(13-வது பக்கத்தொடர்ச்சி)

மேலே கூறியபடி அஞ்ஞான சந்தேக விபரீதங்களாகிய தடைகளையொழித்த ஜீவன் முத்தர்கள் யாவரும் ஒரேவிதமாகத் தோன்றார்கள். அவர்களில் நான்குவித பேதமுண்டு. அப் பேதங்களின்படி அவர்களுக்கு நான்கு நாமங்கள் உண்டு. அவை யெவை யெனின்:—

1. பிரம்மவித்து, 2. பிரம்மவரன், 3. பிரம்மவரியான், 4. பிரம்மவரிட்டன், ஆக நான்கு.

ஞானிகளின் பொதுவான குணங்கள்.

இவர்களுக்குள் ஞானத்தில் பேதமில்லை. நால்வர் அடைந்திருப்பதும் ஒருவித ஞானமே. அவர்களது விசிராந்தி (மன அமைதி) யிலும், அவர்கள் அனுபவிக்கும் ஞானசுகத்திலும் மட்டுமே தாரதம்மியமுண்டு.

ஞானத்தையடைய ஆவல் கொண்டு சாத்திர விசாரணைசெய்து, தன்னையறிந்து ஞானிகளாகத் தெளிந்தவர்கள், பிறகு இலௌகிக விஷய முதலியவை யாவற்றையும் நழுவவிட்டு யாவற்றையுந் துறந்து, விதிநிஷேதங் கடந்த ஞானானந்த அனுபவத்தி லிருப்பார்கள். அப்பால் அவர்களுக்கு நேரும் விஷயங்கள் யாவும் பிராரப்த அனுபவமேயாகும். அதையவர்கள் மன நாட்டமின்றியே அனுபவித்துக் கழிப்பார்கள்.

அத்தகைய ஞானத்தை யடைந்து சகல புறப்பற்றுக் களையும் பகிரங்கமாகக் கைவிடும் வரையில், தத்தமது வருணாசிரம தருமத்திற் குரிய காரியங்களை வழுவாது செய்து வருவார்கள். தாங்கள் சரியை கிரியையாதிகள் இனி வேண்டாமென் றுணர்ந்து ஞானத்தை யடையவே அப்பியாசம் செய்வதாயினும் உலகோரின் நன்மைக்காக பகிரங்கமாய்ச் சரியையாதிகளை யிகழ்ந்து கூறாமல், ஞானநிலையி லிருந்தபடி சகலக் கிரியைகளையும் செய்வார்கள்.

ஏனெனில் ஞானமே மோக்ஷத்திற்கு முக்கிய சாதனமானதாயினும் கிரியையாதிகள் ஞானத்தை யடையும் படிகளாக விருக்கின்றன. ஞானத்தை யடைந்தபிறகே அவை அவசிய மில்லாதவையாகும். ஆதலின் ஞான அப்பியாசியும் அன்னியரின் நன்மையைக் கருதி சரியையாதிகளை யலட்சியமாகக் கூறாது வர்ணாசிரம தருமப்படி யொழுகுவான்.

இல்லறத்திலுள்ள ஞானி சாக்ஷியாக யாவற்றையும் நோக்கிக்கொண்டும், வேடதாரிபோல் உலகத்தாரைப்போலவே நடித்துக் கொண்டு மிருப்பதால் ஒவ்வோர்போது இச்சை, கோபம், துயரம் முதலியவை அவன் மனதின்கண் எழலாகும். பெரும்பாலும் அவை தோன்றாவென்றே கூறலாகும். ஒருகால் தோன்றினும் மறுகணமே அவை நசித்துப்போமன்றி மற்றையர்போல் அவன் மனத்தில் அவை பற்றியிரா.

அவன் அகப்பற்றை யொழித்தவனாதலின் குடும்பத்தோடு கூடியிருப்பவன்போல் பிறர்க்குத் தோற்றினும், அவன் வரையில் தாமரையிலையின் மேலுள்ள நீர்த்துளிபோலும், ஓட்டிற் குள்ளிருந்தாலும் அந்த ஓட்டோடு பற்றாத வின்றியுள்ள புளியம் பழம்போலும் உள்ளத்தில் பற்றின்றி யிருப்பான்.

அவன் எவ்வளவு கல்விமானாயினும் சற்றும் தான் பண்டிதனெனக் காட்டிக் கொள்ளவே மாட்டான். சாதாரணப் பாமரனாகிய ஒரு மூடன் போல் இருப்பான். இன்னும் மௌனமாகவும் இருப்பான். உலகப்புகழ்ச்சியைத் துரும்பினும் அலட்சியமாக மதிப்பான். ஒருவன் குபேரன் போல் செல்வவந்தனாயினும், அரசன்போல் அதிகாரமுடைய உயர்பதவியி லிருப்பவனாயினும், அல்லது சாதாரணமான கல்விக்கடலைக்கடந்தவனாயினும், ஈசுர பக்தியும் ஞானவாசனையும் இல்லானேல் அவனை யொரு துரும்பாகவே மதிப்பான். எவ்வளவு சுய நலங்கருதியேனும் அத்தகையோனை வணங்கு

தல், துதித்தல் செய்யான். கடவுளேயும், அவருக்குச் சமதையான ஞானுசிரியனேயும், ஞானவான்களேயுமன்றி வேறொருவரையும் போற்ருன், துதியான். அதோடு தான் என்ற மமதையாவது, தான் பெரியோனென்ற எண்ணமாவது எள்ளளவுங் கொள்ளான்.

ஞானத்தை யடைந்தோனும் பூர்வம் இயற்றிய கர்மத்தின் பலனுன பிராரப்த போகத்தைப் புசித்தே தீரவேண்டும். ஞானி அஞ்ஞானத்தாலாவது இராகத் துவேஷாதி குணங்களாலாவது தூண்டப் பட்டு ஒரு காரியத்தையும் செய்வதில்லே. அவனுடைய காரியங்களெல்லாம் பிராரப்தத்தாலேயே நடைபெறுவன. ஆதலின் ஞானிகளின் விவகாரங்கள் பிராரப்த அளவின் படி பலவிதமாக விருக்கும். ஒருவன் தவம்செய்துகொண் டிருப்பான், ஒருவன் அரசாள்வான், ஒருவன் வர்த்தகம் செய்வான், ஒருவன் ஊழியம் செய்வான், ஒருவன் பசிவந்தபோது அங்கை யேந்திப் பிச்சை வாங்கி யுண்பான், ஒருவன் காட்டிலுள்ள இலேகாய் முதலியவற்றையே உண்டு காலத்தைக் கழிப்பான். திருட்டாந்தமாக யாக்ஞவல்கியர் சபைகளில் பிரசங்கம் செய்து ஜீவித்தார் என்றும், ஜனகன் அரசாண்டதாகவும், சுகர் வாமதேவர் முதலியோர் தவம் செய்ததாகவும், தாயுமானவர், மாணிக்கவாசகர் இவர்கள் மந்திரித் தொழில் செய்ததாகவும், பட்டினத்தடிகள் வர்த்தகம் செய்ததாகவும், இப்பட்டினத்தடிகளும் பத்திரகிரியாரும் இன்னும் பல ஞானிகளும் அங்கையேற் றுண்டதாகவும் அறிகிருேம்.

ஞானி இறந்தகால விஷயங்களேக் கருதமாட்டான். அவ்வாறே நாளே வரப்போகும் விஷயத்தையும் சிந்தியான். நிகழ்காலத்தில் பிராரப்தத்தால் நேரிடும் பலனேப் புசிப்பான். சூரியன் நிலவாய் மாறிவிட்டாலும், இறந்தோர் எழுந்து நடந்து வரினும், உலகத்தார் அபூர்வமெனக்கருதும் வேறு எத்தகைய விஷயம் சம்பவிக்கினும், அதை யொரு அதிசயமாகக்கருதிப் பாரான். என்ன விஷயங்கள் நேரினும் இது நல்லது இது கெட்டது என்று ஒன்றுங் கூருன். சூரியனேப்போல் யாவற்றிற்கும் சாக்ஷி மாத்திரமாக இருப்பான்.

சாக்ஷி மாத்திரமாக என்பது மனது சற்றும் விஷயங்களில் பற்றுதலாவது, சலித்தலாவதுஇன்றிதிருஷ்டியால்காண்டல் மட்டோடிருத்தல். இந்த நிலேயி லிருப்போர்க்கு வினேயேறுவ தின்ருெம். இவர் தம்மனதில் எந்த விஷயமும் நில்லாது.

மேலே கூறிய குணங்களோடு பொருந்தி தாமரை யிலேநீர் போல் உலகரோடுங் கூடி இல்லறத்திலிருக்கும் ஞானியே பிரம்மவித்து எனப்படுவோன். மற்ற மூவரும் இல்லற நீத்துத் துறவிகளா யிருப்போர். இம்மூவரில், தேகசஞ்சார நிமித்தம், பிராரத்த வசத்தால் சமாதி நிலேயினின்று பகிர்முகப் பட்டு, அவசியமாக வேண்டிய உணவாதிகளே அன்னியரிடம் கேட்டுவாங்கி யுண் போன் பிரம்மவரன் எனப்படுவன்.

அன்னியர் வலியக் கொடுத்தால் மட்டும் வாங்கி யுண் போன் பிரம்ம வரியான் எனப்படுவன்.

தானும் கேட்காது அன்னியர் கொடுத்தாலும் வாங்கிப்புசியாது பகிர்முகப்படாமலே சதா சமாதி நிலேயிலிருப்பவனே பிரம்ம வரிட்டன் என்பவனும்.

சமாதி என்பது உலக நாட்டமேயின்றி இரண்டற்ற அயிக்கிய நிலையிலேயே நிலைத்து நிற்பதாகும். பின்னைய மூவரும் சமாதி நிலையிலிருப்போரே யெனினும், வரன், பசி யாதி வரும் போது ஆகாரம் முதலியவை களைக்கேட்கப் பகிர்முகப்படுவான். வரியன் ஆகாரம் முதலியவை கொள்ள அன்னியர் தூண்டினாலே பகிர்முகத்தில் நோக்குவான், வரிட்டன் தானாகவும் பகிர் முகத்திற்கு வராமல் அன்னியர் தூண்டினும் வராமல் தேகம் சவம்போல் அல்லது கட்டைபோற் கிடக்கத் தான் சதா அந்த அதீத நிலையிலேயே யிருப்பான். அவன் நிலையே முடிவான முத்தி நிலையாகும். அவன் அன்னியர் திருஷ்டிக்கு அநித்தியமும் அசுத்தமும் வெறுக்கத்தக்க மல பாண்டமுமாகிய இத்தேகத்தி லிருப்பவனாகக் காணப்படினும், தன் வரையில் தனக்குத் தேகமிருக்கிற தென்ற நினைப்பாவது உணர்ச்சியாவதின்றி நித்தியானந்தக் கடலாகிய பேரின்ப நிலையில் இருப்பவன்.

மற்ற இருவர்க்கும் தேகம் தம்முடைய தென்ற உணர்ச்சி யில்லையேனும், அதை அவர்கள் அன்னிய வஸ்துவாக சாக்ஷி மாத்திரமாய் ஒவ்வொரு வேளை காண்பார்கள். சமஷ்டி யனுபவத்தில் அது தோன்றியும் தோன்றாதாகும்.

பிரமவித்தும் தேகத்தை யன்னியமாகவே சாக்ஷி மாத்திமாய்க் காண்பன் ஆயினும் அந்நாட்டம் அடிக்கடி நழுவ, தேகத் தோற்றா வில்லாத அனுபவமே மிஞ்சிக்கொண் டிருக்கும்.

இவர்கள் இவ்வாறு பகிர் முகத்திற்கு வருவதால் அப்போ தனுபவிக்கும் ஞான சுகம் குறைவாகிறதே யன்றி, மற்றபடி அவர்களது ஞான நிலைமையை யதுபாதிக்காது. இவர்களுக்குள்ள இந்த வித்தியாசமும் அவரவர்கள் பிராரப்தபலனில் உள்ள அளவின் தார தம்மியத்தால் ஏற்பட்டதே யாகும். ஆகாரம் புசிக்க வேண்டிய அவ்வளவு பிராரப்தம் கூட இன்றி, காண்போர் இவன் தேகத்தோடு கூடிய மனிதனே யென்று கருதச் செய்வது மட்டுமாகிய மிக அற்ப பிராரப்த முடையோரே வரிட்ட பதத்தி லிருப்போர். மற்ற மூவர் நிலைகளையும் இவ்வாறே பிராரப்த அளவின்படி யூகித்துக்கொள்ளவேண்டுமே யன்றி, நால்வரும் ஞானிகளே யாவர். இவர்களே ஜீவன் முத்தர்கள் என்பதும்.

முத்தி என்றால் மோட்சம். முத்தியை யடைந்தோர் அல்லது முத்தி நிலையி லிருப்போர் முத்தர். இம்முத்தி இருவகைப்படும். 1- ஜீவன் முத்தி, 2- விதேக முத்தி.

ஜிவன் முக்தி:—ஜீவித்திருக்கும் போதே தன் ஆன்மாவைப் பிரம்ம சொரூபமாக அநுபவமா யறிந்து அந்த நிலையில் இருப்பது. அதாவது இத் தேகத்திலுள்ள போதே மோக்ஷ நிலையை யடைந்திருப்பது.

விதேக முத்தி:—ஜீவன் முத்தி யடைந்தோர் தேகம் நீங்கியபின் மறுபடி சரீரம் பெறாமல் சச்சிதானந்தப் பரப்பிரம்ம சொரூபமாகிய நிலையில் நிலைத்திருப்பதாம்.

இதனால், இத்தேகத்தி லிருக்கும்போதே முத்தி நிலையை அங்கை நெல்லிபோல் பிரத்தியக்ஷமாகக் காட்டக் கூடியது இம்மார்க்க மென்றும், ஜீவன் முத்தி யடைந்தா லன்றி இறந்தபின் தான் மோக்ஷமடைவ தென்ப

தில்லை யென்றும் அறியக் கிடக்கின்றது. மேற்கண்ட ஜீவன் முத்தி நிலையி லிருப்போரே ஜீவன் முத்தர் எனப்படுவர்.

ஜீவன் முத்தர்களுக்குப் பத்துக்குறிகளுண்டென்று சிவப்பிரகாச சுவாமிகள் அருளி யிருக்கின்றனர். அவை:—

1. குரோத மின்மை, 2. உலோப மின்மை, 3. அகங்கார மின்மை, 4. பஞ்ச இந்திரியங்களையும் அடக்குதல், 5. சமை, 6. தமை, 7. சனப்பிரியத்துவம், 8. கொடை, 9. அபயம், 10. வைராக்கியம் என்ற பத்துமாம்.

"குறிகளோர் பத்துளவா ஞானமயர்க் கவைதாங்
குரோதமின்மை வைராக மைம்பொறிக ளடக்க
லறமுதவு சமைதமையே சனப்பிரியத் துவமே
யலோபமொடு கொடையபய நிருமதமென் றறிக
நெறிமருவு சீடரொடு பத்தருதா சீனர்
நிலையில்பா விகளென்னு நால்வகையோ ரிடத்து
முறையினனுக் கிரகம்வந் துறமருள்கொள் சீவன்
முத்தனு லென்பரவை முறையினெடுத் துரைப்பாம்."

(வேதாந்த சூளாமணி.)

(தொடரும்) சீடன்.

---

## சந்தா நேயர்களுக்கு அறிக்கை

1. சந்தாத் தொகையை மணியார்டர் மூலமனுப்புவோர் நம்பரையும் விலாசத்தையும் குறிக்கவேண்டு மென்றும், நம்பர் மறதியா யிருந்தால் பணமனுப்பாமலே யிருந்து வி-பியில் சஞ்சிகையைப் பெற்றுக்கொள்வது நலமென்றும் நாம் இரண்டு மூன்று முறை வேண்டிக்கொண் டிருப்பது நண்பர்கள் அறிந்த விஷயமே.

அவ்வாறிருந்தும் சிலர் நம்பர் அறிவிக்காமலும், 'சந்தா நம்பர் மறந்துவிட்டது மன்னிக்க வேண்டும்' என்று மணியார்டர் கூபனில் எழுதிவிட்டும், பிறகு நான் முன்பணம் அனுப்பிவிட்டேன் வி - பி. யனுப்பக்கூடாது என்று எழுதியிருக்கிறார்கள். பத்தாந்தேதிக்குமேல் பணம் அனுப்ப வேண்டாம் என்று திட்டமாக எழுதியிருந்தும் சஞ்சிகைகள் யாவர்க்கும் வி-பி.யிலனுப்பப்பட்டபின் பத்துப்பதினைந்து நாட்கள் கழிந்துகூட மணியார்டர்கள் வந்தன. இரண்டு மூன்றுபேர்களுக்குச் சேர்த்துப் பணமனுப்புவோர் தங்கள் நம்பரைமட்டும் குறித்துவிட்டு மற்ற இருவர் நம்பரும் தெரியாது என்று எழுதிவிடுகிறார்கள். இவ்வாறு நடந்து கொண்டு கடைசியில் "முன்பணம் அனுப்பியிருக்க வி-பி - யனுப்பினீர்கள்" என்று நம்மேல் குறைகூறுகிறார்கள். சஞ்சிகையையனுப்ப வேண்டாம் என்று தெரிவியாமலே அனேகர் வி-பி-வந்தபின் வாபீஸ் செய்திருக்கிறார்கள். அவர்கள் மனச்சாட்சியே யவர்களைத் தண்டிக்குமென நம்புகிறோம். இது எவ்வளவு நீதியான தென்பதை நேயர்களறிய வேண்டு மென்றே இதை எழுதினோம்.

இன்னொரு விஷயம் சந்தாநேயர்கள் அறியவிரும்புகிறோம். வருடாரம்பத்தில் பல்லாயிரம் பேருக்கு வி-பி.அனுப்பப்படுகின்றன: தபாலாபீசில்

ஒவ்வொரு விலாசத்தையும் ஒரு பட்டியில் பதிவுசெய்தபின்பே, அவர்கள் சஞ்சிகைகளைக் கட்டியனுப்ப வேண்டும். ஆகையால் தினம் சுமார் ஒரு ஆயிரம் சஞ்சிகைகள் மட்டுமே எடுத்துக் கொள்கிறார்கள். இதனால் ஏக காலத்தில் அனைவர்க்கு மனுப்ப அனு கூலமில்லை. சில நண்பர்கள் இவ்வுண்மை யறியாது, "ஊரில் சிலருக்கு மட்டும் மூன்று நாளைக்கு முன்பே சஞ்சிகைகள் வந்து விட்டன· எனக்கு வரவில்லை" என்று எழுதுகிறார்கள். மேற்கண்ட காரணத்தால் வருட ஆரம்ப சஞ்சிகை மட்டும் பத்துநாட்கள் முன்பின்னாகத் தான்வரும் என்பதை நண்பர் உணரும்படி பிரார்த்திக்கிறோம்.

வி, பி. வரும்போது சந்தாதாரர் ஏதோ அசந்தர்ப்பத்தால் உடனே பணம் கட்ட அனு கூலப்படாமல் "மாலையோ, நாளைக்கோ, இரண்டு நாள் பொறுத்தோ கொண்டு வாரும் அல்லது நான் வந்து வாங்கிக்கொள்கிறேன்" என்று தபால்காரரிடம் கூறிவிட்டுப் பிறகு சொன்ன வேளைக்குப் போய்க்கேட்டால், தபாலாபீஸில் "அதைமுன்னமே திருப்பியனுப்பி விட்டோம்" என்று கூறிவிட்டிருக்கிறார்கள். இதனால் அனேகம் வி, பி. கள் நமக்குத் திரும்பி வந்து நாம் மறுமுறை சந்தாதாரர்க்கு வி.பி. யனுப்ப நேர்வதால் நமக்கு வீண் நஷ்ட மேற்படுகிறது.

ஆதலின் தபால் சட்டப்படிபத்து நாட்கள் வரை வைத்திராமல் மேல் நண்டவாறு கோரிக்கொண்டும் வி. பி.யை வாபீஸ் அனுப்பிவிடும் சந்தர்ப்பங்களில், சந்தாதாரர்கள் சஞ்சிகையின் நன்மையைக்கோரி உடனே கட்டாயம் போஸ்ட்மாஸ்டர் ஜனரல் அவர்களுக்குக் கம்பிளெயின்ட் செய்யும்படி வேண்டுகிறோம். அல்லது விவரமாக நமக்கறிவித்தால் நாமே அவ் வேலையைச் செய்வோம்.

பத்திராதிபர்.

---

## நாட்டுக்கோட்டை நகர வைசியர்கட்கு
## ஓர் முக்கிய அறிவிப்பு

புனிதச் சைவப் புண்யர்காள் !

ஆழ்கடலாடையா யுடுத்த இப்பரத கண்டத்தின் கண் மிக்ககீர்த்தியும் செல்வமும் பெருக நற்கியாதியோடுவிளங்கும் வைசிய மரபாகிய நம் மரபிலுதித்தவரும், கல்விப் பயிற்சியில் சிறந்தவரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ தேவக் கோட்டை சி. நா. வள்ளியப்ப செட்டியார் என்பவர் நமது ஜாதி வரன்முறை தவறி கேவலம் பாமர ஜனங்களை ஏமாற்றிப் பொருள் பறிக்கும் நாடகக் கம்பெனியிற் சேர்ந்து வேடம் புனைந்து ஸ்திரீகளுக்கு முக்கிய அணிகலமாக விளங்கும் அச்சம், மடம், நாணம் முதலிய குணங்களைத் துறந்து நடிக்கும் கணிகை மாதான கும்பகோணம். பி. கே. நாகரத்தினம் என்பவளைப் பர்மிய நாட்டின் முக்கிய நகரமாகி இரங்கூன் நகர் ஜுபிலி மண்டபத்தில் திரளான ஜனங்களின் முன்னிலையில் வேதவிதிப்படி திருமணம் செய்துகொண்டா ரென்பதையும், தாங்க ளிருவருமே சதிபதிகளென்பதற்கு ரிஜிஸ்டர் செய்துகொண்டார்க ளென்பதையும், பத்திரிகைகளின் மூலமா யறிந்த நண்பர் ஒவ்வொருவரும் அவரது மதிமயக்கத் தவறுக்காக வருத்தமுறாதிரார் என்பது திண்ணம்.

மேலும் அவர் தம் தவறுக் காகக் கிஞ்சித்தும் மனத்தாங்கலடையாது இன்னும் மற்றுமுள்ள சகோதர சகோதரிகள் யாவரும் இவ்வித மன ஒற்றுமை விவாஹத்தையே நாடவேண்டுமென நம் தாய்ப்பாஷையான தமிழ் பாஷையை விட்டுத் தற்கால நவீன நாகரீகமெனப் பரவி வரும் இங்கிலீஷ் பாஷையில் பிரசங்கித்தார் என்பதை வைசிய மித்திரன் என்ற பத்திரிகை மூலமா யறிய என் மனம் அதிக வருத்த மடைந்தது.

என்னே! அவரது மதி சென்றவாறு! பண்டைக் காலம் தொடங்கி மிக்க கீர்த்தியுடன் விளங்கும் நம் மரபி லுதித்த இவரது மனம், இவ்வித நெறி தவறுதலான விவாஹத்திற்கு எவ்வாறு இயைந்ததோ அதை அந்தப் பரம் பொருள்தா னறியவேண்டும்.

நங்குலத்தவர்கள் இது காலம் வரை யாதொரு இழுக்கிற்கும் இடங்கொடாதிருந்துவந் திருப்பதை இவர் நன்கறிந்திருந்தும், தம் மனைவி மக்கள் பந்துக்கள் இனத்தார் யாவரையும் வெறுத்து, கேவலம் பொருளையே பெரிதென மதித்து தோட்டி முதல் தொண்டமான் வரை யார் பொருள் கொடுப்பினும் அவர்களுட னெல்லாம் கூடி அவர்கள் இஷ்டம்போல் நடந்து மோசமே செய்யும் தொழிலினையுடைய பரத்தையர் மரபிலுற்ற பாவையை, குலத்தார் மதிப்பரோ குவலயம் இகழுமே என்ற அச்சம் கிஞ்சித்தும் இல்லாது மனத்துணிவுடன் மணம் புரிந்தது மிகவும் நன்று; மிகவும் நன்று.

முத்தல வேந்தரான சேர சோழ பாண்டியர்களால் நன்கு ஆதரிக்கப் பெற்று அவர்கள் இடருற்ற சமயங்களில் நல்லுதவியை யளித்து நன்கு மதிக்கப்பட்ட மாணிக்கங்களான நம்மவர்கள் தமக் கின்னற் படும் பொது விஷயங்களைக் குறித்தோ மற்ற விஷயங்களைக் குறித்தோ அரசர்களிடம் சென்று அம்பல மேறி வழக்காடுதல் மேன்மையான தல்ல வென்பதை நினைத்துத் தமக்குள்ளாகவே நகரக் கூட்டம் என்ப தொன்றை ஏற்படுத்தி அவ்வவ் விஷயங்களை அந்நகரத்தாருக் கறிவித்து அதற்கு அவர்கள் என்ன தீர்ப்புக் கொடுக்கிறார்களோ அதன்படி நடந்து கொள்ளுகின்றார்கள்.

இத்தகைய மதிப்பிற் சிறந்த மரபில் உற்பவித்தும் நமது நண்பர் வள்ளியப்பச் செட்டியார் கேவலம் பெண்ணாசையால் குலமுறை தவறியது முக்காலும் தப்பிதம் என்பதை நானுரைக்காமலே நேயர்கள் யாவரும் அறிவர்.

இனி யாகிலும் சிவ தர்மச் செல்வ நண்பர்கள் யாவரும் இத்தகைய நெறித்தவறான காரியங்களில் மற்றுமுள்ள வாலிபாதி நண்பர்கள் பிரவேசியாதிருக்க வேண்டிய மார்க்கங்களை முன்ஜாக்கிரதையுடன் தேடிக்கொள்வார்களென நான் நிச்சயமாய் நம்புகிறேன். ஆனந்தன் நீடூழி வாழ்க. பிழையுளதேல் ஆன்றோர் பொறுக்க.

இப்படிக்கு,
தங்கள் ஊழியன்,
ந. மு. அ. நல்லகருப்பன்,
நச்சாந்துபட்டி.

குறிப்பு:—மேல்கண்ட கடிதத்தில் கூறப்பட்ட செய்கையை "அவர் பிராரப்தவினை" என்பர் சிலர். ஆண்டவர் நமக்கு அறிவையளித்திருக்கிற வரையில் "இக்காரியத்தைச் செய்தால் உலகப்பழிப்பு, அல்லது பாபம்,

அல்லது அரசதண்டனை முதலியவைகளில் ஒன்றேனும் பலவேனும் நமக்கு நேரிடும்" என்று புத்திக்குப் புலப்படுகிற ஒரு காரியத்தைச்செய்வது ஒரு போதும் பிராரப்த வினையாகாது.

மாதர், பொருள் முதலிய ஆசையால் கெட்டவர் பலர். அந்தோ! நமது நாட்டில் எண்ணிறந்தோர் இவற்றால் புறமதப் படுகுழிக்கிரையாகினர்க ளென்பது நாம் அறிந்த விஷயமே. ஆயினும் ஜாதியாசாரத்திற்கு மாறாக மணம்புரிந்து கொண்ட அந்தச்சகோதரர், மூக்கறையன் கூறியது போல் மற்றபேரையும் அவ்வாறு நடக்கும்படி போதிப்பதே நமக்கு மிக்க வியப்பையும் நகைப்பையும் துயரையும் உண்டாக்குகிறது. நமது நாட்டாரில் பலர் இத்தகைய தகாத காரியங்களில் பிறரைப் பின்பற்றுதலே சீர்திருத்தம் என்று மயங்கியிருக்கிறார்கள்; சிலர் தம் மனம்போனபடிசெய்துவிட்டுச் சீர்திருத்தத்தைக் கருதியே யப்படிச்செய்ததாக அபிநயித்து இதனால் கௌரவமே யடையலாமெனக் கருதுகிறார்கள்.

அந்தோ இத்தகைய மயக்கம் நமக்கு இன்னும் சீர்கேட்டை விளைவிக்கு மென்பதேதிண்ணம். "குலத்தைப் பார்த்துப் பெண்ணைக்கொள்" என்பது நமது முன்னோர் விதி. அதாவது "ஏழைக்குடும்பமாயினும் செல்வம் பொருந்திய குலமாயினும், அந்த வித்தியாசத்தை மட்டுமே கவனியாதே! முதலாவது குலம் பழுதில்லா நற்குலமா என்பதைப் பார்த்துப் பெண்ணைக்கொள்" என்பது விதி. அவ்வாறிருக்க இக்காலத்தில் சிலர் "குலத்தில் என்ன விருக்கிறது? எந்தக் குலமென்றா லென்ன?" என்று சில மந்தமதியினர் கூறுகிறார்கள். இத்தகையோர்,

" * * * * *

தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகுமாம் குணம்"

என்று அருளிய ஸரஸ்வதி அவதாரமென்னும் ஔவை பிராட்டியாரினும் தாங்கள் அறிவின் மிக்கோரெனக் கருதுகிறார்களாக்கும். பிரத்தியக்ஷத்தில் இழிகுலப் பிறப்புடைய ஒருவன் எவ்வளவு செல்வவந்தனாக விருப்பினும் எத்தகைய உயர்பதவியி லிருப்பினும் சமையத்தில் அவனிடம் இழிந்த செய்கை கட்டாயம் இருக்கக் காணலாம்.

இந்துக்களாகிய நாம் இத்தகைய தகுதியற்ற ஆசாரங்களைப் பின்பற்றலாகாதென்று இன்னும் இருப்போர் எச்சரிக்கை யடையவேண்டு மென்பதைக் கருதியே மேற்கண்ட கடிதத்தை நாம் வெளியிடநேர்ந்தது.

பத்திரிகாசிரியர்.

---

## வாழ்த்துப் பாக்கள்.

நந்தாய்நா டெனவியம்பும் பாரதமா வுலகினுள நம்மனோருக்
கெந்தாய்நா டென்னுடைமை யென்சுதர்க ளென்மரபோ ரென்ன வேயா
நந்தாயென் னுஞ்செவிலித் தாய்கிளம்பித் தமிட்பசிநோய் நைவதற்கே
சிந்தாதப் பானிறைமுத் தமிட்குடத்தை யன்போடு சென்னிவைத்தே.

சென்னைநகர் தனையடைந்தன் போடயலார்க் குதவிசெயுந் திறமைவாய்ந்த
மன்னயநம் முனிசாமிக் குரிசிலவன் வழிமுறையே வழங்கிப்பொன்போ

லன்னவன்செயச்சுரத மீதேறி நான்கெலையு மாசாய்க்கொண்ட
தன்னையின்று றென்றியம்ப வானந்த போதினியாய்த் தழைத்ததம்மா.

அறம்பொருள்வீ டடையவரு நம்மரபோ ரியாவருக்கு மன்பாயோதித்
திறம்பெறுபா லூட்டவெளி வந்ததிதா னந்தியெனத் தினமுநம்மின்
கரம்பெறுமா னந்தப்பா லுண்டுகளி கொண்டுமனங் கனிந்துசெல்வப்
பரம்பொருளை யனுதினமுந் துதிபுரிந்து வாழ்ந்துசுகம் பரவுவோமே.

கண்ணிழந்தோன் பொருளிழந்தோன் காலிழந்தோன்
கரமிழந்தோன் கட்டுந் தாலிப்
பெண்ணிழந்தோன் மகவிழந்தோன் புவியிழந்தோன்
பொறையிழந்தோன் பெட்போ டாயு
மெண்ணிழந்தோ னுறவிழந்தோ னிவரிவர்க
ளெண்ணியவை யெய்தினுற் போல்
பண்ணிவர்ந்தோ மானந்தப் பத்திரிகை தனையடைந்தோம்
பயங்கொள் ளாது.

திரட்டுசுவைக் கூட்டமுதை நம்மரபோ ரியாவர்களுந்
தென்பா யுண்டு
புரட்டுசுவை தனைக்களைந்து வெளியாக்கிப் பெரும் புகழைப்
பெரிதாக் கொண்டு
மருட்டுகின்ற தமிட்சுவையை யெளிதிலுணர் விக்கவொரு
மாதா மாதம்
திரட்டிவரு மானந்த போதினியா லெல்லவருந்
தெளிய லாமே.

எ. சுந்தரம் பிள்ளை,
டிராவலிங் ஏஜண்டு, பண்டமங்கலம்.

---

## (பெண்மணிகளுக் கான குறிப்புகள்)

1. அடிக்கடி வீட்டை விட்டுச் செல்லும் வனிதைகள் பெருமை யிழப்பர். துணையின்றிப் போவது பிசகு. வண்டிக்காரர்களை நம்பி விடலாகாது. வண்டியில் ஏறுகிறவரைக்கும் வெகு உத்தமர்கள் போலிருந்து ஏறியதும் வண்டியில் இருப்போரை முரட்டுத்தனமாய்ப் பார்ப்பதும் பேசுவதும் பல வண்டிக்காரர்களின் சுபாவம்.

2. வேலூர் முதலிய நகரங்களில் நாயுடு, பிள்ளை, செட்டி முதலியார் இன்னும் இதர குலங்களிற் பிறந்த பெண்கள் பருவமடைந்தபின் கலியாணமாகும் வரை பர புருஷர்களின் முன்பாக வரமாட்டார்கள். இது சர்வோத்தமமான ஏற்பாடு. தனக்கு இரக்ஷகன் ஏற்படும் வரைவெளியே செல்வதும் ஆண்மக்களுடன் சம்பாஷிப்பதும் கௌரவஹீனம்.

3. ஏழைகளாயினும் தனவான்களாயினும் மிகுந்த அவசிய மிருந்தாலன்றித் தங்கள் வீட்டுப் பெண்களை வெளியே போம்படி விடுவது தவறு. வீதியில் ஸதா திரியும் குலமாதர்களைக் கண்டு துரபிப்பிராயம் கொள்வது சில கெட்ட புருஷர்களின் வழக்கம். ஆதலின் தனத்தைப் பெட்டியில்

வைத்துப் பூட்டிப் பத்திரப்படுத்திக் காப்பதுபோல், பெண்கள் தங்களுடைய மேன்மையான சரீரத்தையும், உத்தமமான நன்னடக்கையையும் சிலாக்கியமான கற்பையும் வீட்டுக்குள்ளிருந்து காப்பாற்றிக் கொள்ளவேண்டும். பிறர் மனைக்கேகும் பெண், பதருக்குச் சமானம்.

4. முக்கியமாய் ஸ்திரீகள் பர்த்தாக்களுக்குப் பாத சேவகிகளாயிருந்து கொண்டு அவர்களின் மனதை எக்காலத்திலும் தொந்திரவுக்குட்படுத்தாமல் ஆநந்த வார்த்தைகளால் ஆதரித்துச்சம்ஸாரத்தை நடத்தி வரவேண்டும். சம்சாரம் நடத்துவதற்கு அநுபோகமும் பொறுமையும் ஏற்படவேண்டும்; யுக்தாயுக்தங்களைக் கிரகிக்கப் புத்திவேண்டும்.

5. யோக்கியவதிகளின் சம்பாஷணையும் புத்திசாலிகளின் சிநேகமும் அநுபோகஸ்தர்களின் ஆதரணையும் பெரியோர்களின் புத்திவாதங்களும் அவசியமிருக்க வேண்டும். அநேக விஷயங்களை யறிந்தாலொழிய ஒரு பெண் மணி சம்பாஷணைக்கு யோக்கியவதியாகாள். அநேக விஷயங்களின் ஞானம் கல்வியில்லாமல் வருமா?

6. இரண்டு ஸ்திரீகள் ஓரிடத்தில் சேர்ந்தால் அவர்களின் சம்பாஷணைக்கு அண்டையயலார் மேல் நிந்தை கூறுவதைத் தவிர வேறு பிரயோஜனகரமான விஷயங்கள் வரா. வித்தியா ஹீனர்களான இரண்டு புருஷர்கள் ஓரிடத்தில் சேர்ந்தாலும் உத்தமமான விஷயத்தில் மனதைச் செலுத்தாமல் பரநிந்தைகளைச் செய்வதிலேயே பரமானந்தங் கொள்வார்கள்; இவர்களெல்லாம் ஞான சூன்யர்கள்; பசுவுக்குச்சமான மானவர்கள்

7. படித்த பெண்மணி பள்ளாங் குழியைத் தேடாள். பல பெண்களின் கூட்டத்தை நாடாள். புத்தகமும் கையுமாக இருப்பாள்; தன்னில் தானே படித்துணர்ந்து அந்த ஆனந்தத்தில் மயங்கிநிற்பாள்; நாளுக்கு நாள் மேலுக்கு மேல் தன் அறிவை அபிவிர்த்தி செய்துகொள்வாள். கணவனுக்கேற்ற கண்மணியாக விளங்குவாள். பயனிலாச் சொல் அவளிடம் தோன்றாது. பரநிந்தையில் அவள்சித்தம்புகாது. தன்னைப்போலவே மற்ற பெண்களும் திருந்தி, அதனால் தேசம் க்ஷேமப்படவேண்டு மென்பதே அவளுடைய நித்திய பிரார்த்தனையாக இருக்கும்.

8. தன் வரையில் எவ்வளவு யோக்கியவதியாக விருப்பினும், அன்னியர் துர் அபிப்பிராயம் கொள்ளும்படி இடந்தரும் காரியங்களைச் செய்யலாகாது. எத்தகையகாரியங்களெனில், அடிக்கடி வீட்டைவிட்டு வெளிச்செல்லல், அச்சம் நாணமின்றி, இரவுபகலென்று பாராமல் வெளியில் திரிதல். அன்னிய வாலிபப்புருடரோடு தனியே யிருந்து சம்பாஷித்தல், அவசியமானவேலை யிராதபோது இரவில் வெளிச்செல்லல், அவசிய வேலையிருந்தாலும் தக்க துணையின்றி செல்லல், புருடர் கூட்டத்தில் நாணமின்றி கூடியிருத்தல் சம்பாஷித்தல், துர் நடக்கையுடைய மாதரோடு சகவாசம் செய்தல், எத்தகைய சந்தர்ப்பமா யிருந்தாலும் புருடன், புத்திரன்முதலியோர் தவிர அன்னிய ஆடவன் கரம் தன் தேகத்தில் படச்சம்மதித்தல், முதலியவைகளாம். இத்தகைய நடவடிக்கையுடைய ஸ்திரீயைப் பற்றியொருவரும் நல்ல அபிப்பிராயங் கொள்ளமாட்டார்க ளென்பது உலக அனுபவம். இத்தகைய நடக்கைகளையுடைய மாதர்களின் கணவர்கள் யாவ

ராலும் அவமதிக்கப் படுவார்களாதலால், அறிவாளிகளாகிய ஆடவர்கள் இத்தகை நடக்கைகளைக் காணில் மிகக் கண்டிப்பாய்த் தடுக்காமலிரார்.

9. புருடன் கோபித்துக் கொள்ளும்போது அன்பார்ந்த மிருதுவசகனங்களால் அவன் கோபத்தையகற்றுவதை விட்டு, தானும் கோபித்துக் கொண்டு சச்சரவு விளைக்கும் மனைவி பேய்க்குச் சமானமாவாள்.

10. சதா வீட்டை விட்டு வெளிச்செல்வதிலேயே பிரியமுடைய மனைவியிருக்கும் குடும்பத்தில் இலட்சுமி காலெடுத்து வைக்காள்.

டி. ஆர். தங்கவேலு நாய்க்கர்,
போர்ட் எலிமென்டரி பாடசாலை, தேசூர் கிராமம்,
(வந்தவாசி தாலூக்கா வட ஆற்காடு)

---

## இரண்டு குறைகள்

அன்பார்ந்த நேயர்களே!

நம் ஆனந்தனின் ஐந்தாம் வயது பன்னிரண்டாம் மாத சஞ்சிகையின் 473-வது பக்கத்தில் "ஓர் வேண்டுகோள் என்ற வியாசத்தின் ஆசிரியர் குறிப்பை வாசித்தோர் அனைவரும் மேற் குறித்த குறைகள் இரண்டையும் கவனித்திருப்பீர்க ளல்லவா? அதை அஸ்திவாரமாகக் கொண்டு வரையும் இச்சிறு வியாசத்தில் உள்ள பிழைகளைப் பொறுத்தருளுமாறு வேண்டிக் கொள்கிறேன்

"நம்மவர்களுக்கு மதக் கல்வி போதியா திருத்தல்" ஒன்று, "ஒரே தாயாகிய பாரத மாதாவின் வயிற்றி லுதித்த சகோதரர்களில் தாழ்ந்த வகுப்பாரை அலட்சியமாகவும் அடிமைகள் போலவும், அவர்கள் வெறுப்புறுமாறு நடத்துதல்" என்ற இரு குறைகளும் நீங்குமாறு கருணாநிதியிடம் பிரார்த்தனைசெய்யப் படுகிறதல்லவா?

முதற் குறையைக் கவனிக்கில் தற்கால கல்விபெரும்பாலும் ஜீவனோபாயத்தை நோக்கமாய்க் கொண்டு கற்பிக்கப் படுகிறதேயன்றிச் சமயமதாசாரங்களையும், மறுமைப்பயனுக்குச் சாதனமான போதனையும் கிஞ்சித்துமில்லையென்றேகூறலாம். தற்கால உயர்தரக்கல்விபயிலும் இளைஞர்கள் ஒரு நாளில் முக்கால் பங்குக்குமேல் ஆங்கிலத்திலும் மீதியை விளையாட்டிலும் இதரவேலைகளுடன் தமிழ்ப்பாஷையிலும் காலங் கழிக்கிறது கண்கூடாம். அதன்பயனாகத் தமிழில் சரியாய்ப்பேச இயலாஞய் இரண்டிலும் பூரணத் தேர்ச்சியின்றிப்பாதி ஆங்கிலமும்பாதி தமிழுமாய் வீட்டிலும் வெளியிலும் பேசி, நவீனமெ‌ன ஒரு மேல்நாட்டான்கூட நம்முடை தரியாதிருக்க தாங்களே அவர்களுடையை அணிந்து. (Modern civilization) "நவீன நாகரீகம்" எனப்பெயர் கொடுத்துக் கொண்டு, பண்டையோரின் அபூர்வ அனுபவ அரும் உரைகளையும், ஆசாரங்களையும் தூஷித்துத் திரிகின்றன ரென்றால்,அவர்கள் ஆசார சீலராய் மதப்பற்றுட னிருப்ப தெங்கனம்? அவர்கள் மேல் பிழை கூறுவதில் யாது பயன்? தம்மதப் பெருமைகளையும், நம் முன்னோர் பிரதாபங்களையும் அவர்கள் சரிவர அறியார்கள்.

அரசாங்கத்தார் (University) கலா சங்கத்தாரால் உயர் தரப் பரிக்ஷைகளுக்குக் குறிக்கும் பாடப்புத்தகங்களில்,அதிலும் தாய்ப் பாஷையில் தேனென இனிக்கும் அரும்புலவ சிகாமணிகளின் திறமையால் வரையப்பெற்ற பாரத இராமாயணம் முதலிய புராணகாவியங்கள் இருக்க அவைகளுக்கு அதிக சிரமம் கொடாது தெள்ளிய நடையில் வரைந்த ஆங்கில சீமான்களின் சரிதங்களாகிய ஏ. கார்பூல், செரிம், மக்பத், ஹாம்லத் போன்றவை தெரிந்தெடுக்கப் படுகின்றன. ஆரம்பம் முதல் அந்தியம் வரையில் மதபோதனைகளும் நல்லொழுக்கமும் எங்கும் போதிப்பது இல்லை யென்றே கூறலாம்.

அரசாங்கத்தார் மத விஷயங்களில் நுழைவதில்லை. ஆனால் அவர்களிட்ட புத்தகங்களிலேயே பாடம் கற்பிக்க வேண்டும். உயர்தரப் படிப்பில் கற்பிக்க நியமிக்கப்படும் ஆசிரியர்கள் மணிக் கணக்காய் வேலை செய்து வருவதன்றி,பாடம் தவிர மற்றதில் தலையிட்டுக் கஷ்டப்படுவதில்லை. தமிழ் முதலிய இரண்டாம்பாக படிப்பு கற்பிக்கும் பண்டிதர்கள் சொன்னபோதிலும், அவர்களிடம் அநேக பிள்ளைகள் பய பக்தியுடன் கவனித்து ஏற்கிறார்களில்லை. ஆரம்பக்கல்விக்கு போதிக்கப் போகும் போதனாமுறை உபாத்தியாயர்களுக்கு 1918-1919ல் பாடமாக ஹாம்லத், இயேசு சரிதம் என்பவை வைக்கப்பட்டன. பெரும்பாலும் தமிழ் பாஷைப் பெயர்களல்லாது ஆங்கிலப் பெயர்கள் உச்சரிப்பது கடினமாக வல்லவா இருக்கிறது.அதைப் படித்து அதிலிருந்து என்ன தம் மாணவர்களுக்கு அவர்கள் கற்பிக்க இயலும்? முதற்குறை தகுந்த மதாசார போதனைகளைக் கட்டாய பாடமாகப் பாடசாலைகளில் கலாவல்லோர் நியமித்தா லல்லது நீங்காது. ஆகையால் ஆனந்தச் செல்வனைச் சீராட்டும் நேயர்களில் உபாத்தியாயராய் விளங்கும் நண்பர்களே! இனியாகிலும் நாம் நம்முடைய பாடசாலைகளில் காலையில் ராஜவாழ்த்து கூறுவதற்கு முன் இரண்டு மூன்று நிமிடங்கள் நமக்குச் சகல மும்ஈந்து காக்கும் சர்வேசனையும் கலாரூபியாம் கலைவாணியையும் ஒருசிறு பாவால் துதிப்பது என்பதைத் தயவுடன் அனுஷ்டிப்பதுடன், நம் சிறார்களுக்குத் தாய் பாலூட்டும் பான்மையாய் தினே தினே நம் மதத்தின் உயர்வையும், ஆன்றோரின் நூல்உண்மையையும்,புராண இதிகாச மகிமை பெருமைகளையும், நாட்டின் சிறப்பையும், நம்மவரின் கடமைகளையும், அன்னிய மதத்தில் சேர்ந்த அறிவிலியாம் பேதைகள் அடையும் பலா பலனையும், நாம் அவசியம் ஒழுகவேண்டிய ஆசார சீலங்களையும், நன்னடைக்கைகளையும், யாதொரு கைம்மாறு வேண்டாது நம்பாரதப் புதல்வரின் முன்னேற்றத்தை முன்னிட்டு, வாயாற் சில நிமிடங்கள் முழு மனதுடன் போதித்து தேச நன்மையாம் புண்ணியப் பேறு பெறுவீர்களாக. ஈஸ்வரன் அனுக்கிரகிக்க வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

இரண்டாவது குறையைப்பற்றி மறுமுறை கூறுவாம்.

நா. கிருஷ்ணசாமி ஐயன்,
தலைமை ஆசிரியன், போர்டு பாடசாலை,
குரும்பேரி. திருப்பத்தூர்.

---

குறிப்பு:—இவ் வியாசத்தில் நண்பர்கூறும் விஷயங்களை உபாத்திமார்கள் தயவு செய்து கவனித்து அவ்வாறொழுகுவது நம் தாய் நாட்டிற்குச் செய்யும் மிகப் பெரியதும், இக்காலத்திற்கு அத்தியாவசிய மானதுமாகிய

ஓர் புண்ணியத் தொண்டாகும். தாய் நாட்டின் மேல் அன்பும், நம் ஒப்புயர்வற்ற மதத்தில் அபிமானமும் உடைய உத்தமர்கள் இத் தொண்டைச் சந்தோஷத்தோடும் ஊக்கத்தோடும் ஏற்றுக்கொள்வார்களென்பது திண்ணம்.

இப்போது வைக்கப்படும் பாட புத்தகங்களில் பல நமது பாலர்களுக்கு நன்மை யளிக்கத்தக்கவையல்ல. அதற்கு மாறாக நமது மதத்தின் பெருமையையும் மகிமையையும் நமது பாலர் குறைவாக மதிக்கும்படிச் செய்யத்தக்க புத்தகங்களும் உளவென்று விசனிக்கிறோம். இதைப் பற்றிப் பிரத்தியேகமாய் வரைவாம்.

பத்திரிகாசிரியர்.

---

## அன்னிய நாட்டுச் சந்தாதாரர்களுக்கு,

## முக்கிய அறிவிப்பு.

இப்போது தென் ஆப்ரிகா, மொஸபொடேமியா, ஈஜிப்ட் முதலிய விடங்களுக்கும் பினுங் மலாக்கா ஸிங்கப்பூர் இந்த விடங்களைப்போல் தபால் சார்ஜ் அதிகமாகிவிட் டிருப்பதால் அந்த நாடுகளிலுள்ள சந்தாதாரர்களும் (அதாவது இந்தியா பர்மா இலங்கை இவை தவிர மற்ற எல்லா விடங்களிலுமுள்ள சந்தாதாரர்களும்) வருட சந்தா ரூ. 1—4—0 வீதம் அனுப்பும்படி கோரிக் கொள்கிறோம். இவ்வருடம் போஸ்டல் ஆர்டர்கள் மூலமாகச் சந்தாவை யனுப்பிய அன்னிய நாட்டுச் சந்தாதாரர்களில் பலர் இங்கு ரூ. 1—4—0-க்கும் குறைந்த தொகை கிடைக்கத் தக்கதாகவே அனுப்பி யிருக்கிறார்கள். ஆகையால் பண மாற்று விகிதத்தைச் சரியாக விசாரித்து இங்கு ரூபா 1—4—0 சரியாகக் கிடைக்கும்படி யனுப்பக் கோருகிறோம்.

பத்திராதிபர்.

---

## நல்லினஞ் சேர்தல்

கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட இப்பூவுலகின் கண்ணுள்ள ஜீவபேதங்களில் அதிகசிரேஷ்ட மானது மானிடப்பிறவி. அதாவது ஓரறிவு உயிர்தொடங்கி ஆறறிவு உயிர் இறுதியாயுள்ள எண்பத்து நான்குலக்ஷம் பேதமான ஜீவராசிகளுள் இது நன்மை இது தீமை எனப் பகுத்துணரும் ஆறும் அறிவானது இம்மக்கட்ஜாதி ஒன்றிற்கே உளது. இவை அடையவேண்டியவை புருஷார்த்தங்களே. அவ்வித புருஷார்த்தங்களை அடைவதற்குக் கல்வியே முக்கியமானது. ஆதலால் மானிடராய்ப் பிறந்த ஒவ் வொருவரும் அதை விருத்திசெய்ய முயலவேண்டும். அவ்விதம் கல்வி கற்கினும் தம்மிலும் முதிர்ச்சியடைந்து கல்வி கேள்வி ஒழுக்கங்களில் சிறந்து, தம்மையடைந்தவரைத் தீயசெயல்களி லிருந்து மீட்டு நற்செயல்களில் பயிற்றுவிக்கும் நல்லோர் துணையை நாடவேண்டும். அவ்விதம் நாடினவர்கள் சீர்மையடைவார்கள். அதாவது:—

" பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாம்-றேரில்
சிறியார் சிறுமையும் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து "

என்னும் ஆன்ரோர் வாக்கியத்திற்கிணங்க நல்லோருடையதுணையை நாடினவர்களுக்கு பரோபகாரத்தை ஆபரணமாகக் கொண்ட அந்நல்லோர் தம்மை 'யடைந்தவர் தாழ்ந்தவரேனும் மனமுவந்து கல்விகேள்விகளைக் கசடறப் போதித்து பேதைமையை நீக்கி மேதையுண்டாக்கி இழுக்கெலா மிரிய ஒழுக்கம் பயிற்றித் தம்மைப்போல சீர்மைபெறச் செய்வர். இதனை "தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினும் அவர்தம்-மருண்ட தன்மையை மாற்றுவர் எனுமிது வழக்கே" என நம் கவிச்சக்ரவர்த்தி யாகிய கம்பநாட்டாழ்வார் கூறியுள்ளார். மேலும் நல்லோருடைய சேர்க்கையானது, கல்வியில் அவாவும், குருவினிடத்தில் வணக்கமும், பழிப்பில் அச்சமும், கடவுளிடத்தில் பக்தியும், தீயோர் இடத்தில் பிரிவும் உண்டாக்கி வாக்கில் சத்தியத்தை நிறுத்தி, யாவரிடத்தும் நன்குமதிப்பை யுண்டாக்கும். இவ்விதகுணங்க ளமைந்த நல்லோருடைய நட்பை எவர்தாம் மறுக்கவல்லார்.

"ஆயின்மறை முதற்கலைக ளனைத்துமுணர்ந் தறமறம்பாத்  
தேயினிது நன்றிதுதீ தென்றுணர்த்து மவர்நட்பை  
வீயினுந்தா மறப்பர்களோ மேதையோர் மறப்பரே  
ஞயினுங்கீழ்ப் பட்டவர்க ளவர்காணிந் நானிலத்தே" என்றும்,

"சமயம்வரி னிடித்துரைப்பார் தக்கவழிச் செலச்செய்வார்  
இமையவர்த முலகுறவு மிருளுலகம் பகையுமா  
யமையவறி வுறுத்துவா ரந்தோநூல் கற்றுணர்ந்த  
கமையுடையார் நட்பெவர்க்குக் காண்கிடைக்கும் அரிதரிது"

என்றும் கூறும்முதுமொழிக் கிணங்க நல்லவருடைய நட்பை அடைந்தால் இந்நற்குணமுடைய பெரியோர்கள் எவ்விடத்தி லிருந்தாலும் தாங்கள் ஒருவர்மீதுவைத்த அன்பை மறக்கமாட்டார்கள். தம்மையடைந்தவர்களைக்கண்டமாத்திரத்தில் நன்கு உபசரிப்பர். நல்லோரை அண்டினவர்களுக்குத்தீயோரால் ஓர்தீங்குநேரிடினும் உடனே அந்நல்லோர் அதை நாசஞ்செய்துவிடுவர். அதனால் தீயோர் கொடுஞ்செய்கை நல்லோரைச் சார்ந்தவர்களிடம் ஒன்றும் செல்லாது. இத்தகைய அறிவுடையாரோடு பழகும் மனிதனுக்கு வேறெந்த நன்மைதான் பயவாது ! ஆகையால் இத்தூயோர்களுடைய நட்பானது. சிறந்ததாம் இன்னும்

"முத்திக்கு வித்தாகு முழுதுணர்ந்தோர் பெருநட்பே  
தித்திக்கு நாடோறுந் தேவர்பெறற் கருந்திருவுஞ்  
சித்திக்கும் படியருளுஞ் செப்பரிதால்  
... ... ... ... ..."

எனப் புகழ்ந்து கூறும் நல்லோராகிய நட்பினர், உயிரானது தேக மிளைத்த காலத்தில் தானு மிளைத்துச் செழித்த காலத்தில் தானும் செழிப்பதுபோல, தம்மை யடைந்தவர் துன்புறும்போது தாமும் துன்புற்று அவர் மகிழ்ச்சி யடையும் போது தாமும் மகிழ்ச்சி யடைவார் இத்தகைய அறிவோர்களுடன் ஒருவன் நட்புக்கொள்ளல் தகுதியே யன்றிப் புல்லோருடன்சிநேகம் செய்தல் தகுதியாகாது. அவ்வாறு செய்யில் அவன் பெருந்துன்பங்களுக் குள்ளாகி நாசமடைவான் என்பதில் ஐயமில்லை. இது பற்றியன்றோ,

"பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர் கைவிடல்"
"தம்மிற் பெரியார்த் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாம் தலை"

என்று நமது தெய்வப்புலமைத்திருவள்ளுவநாயனரும் விளக்கி இருக்கின்றனர். ஆதலால் நல்லோர்களுடைய சேர்க்கையை விட்டுப் பிறனுக்குத் துன்பத்தை யுண்டாக்கி அதை அவன் சகிக்க மாட்டாமல் விசனப்படச் செய்கின்றவர்களும், பிறரைப்பகைத்து அவர்களுக்குத் தீங்கு விளைத்துக் கஷ்டத்தை யுண்டாக்கி மகிழ்கின்றவனும், ஒருவர் செழித்திருக்குங்காலத்தில்நெருங்கி உறவாடி அவருடைய சுகங்களையெல்லாம் தாமும் அடைந்து, அவர்கஷ்டப்படுங் காலத்தில் அறியாதவர்கள்போல அவரை விட்டு நீங்குபவர்களுமாகிய தீயோரினத்தைச் சாராமல்,நல்லோர்களுடையசேர்க்கையை அடையவேண்டும். இதனாலன்றோ நமது கல்விச் செல்வியாகிய ஔவை பிராட்டியாரும் "சேரிட மறிந்து சேர்". "நல்லிணக்க மல்லது அல்லல் படுத்தும்" என்று விளக்கியுள்ளார். இன்னும்,

இவ்வித அருமைக் குணங்க ளமைந்த நல்லோர்களைச் சகாயமாகக் கொண்டு செய்யத்தக்ககாரியங்களைத் தெரிந்துசெய்து, செய்யத்தகாத காரியங்களைத் தெரிந்து விடுக்கவேண்டும். ஆதலின் மக்கட் பிறப்பினும் ஆண் மக்களாயுதித்த ஒவ்வொரு வரும் பலவித ஞானநூற்களைக்கற்றுணர்ந்த நல்லினத்தோடு சேர்ந்து, அவர்கள் அருளைப் பெற்று ஜனன மரணத்துன்பங்களை நீக்கி எப்போதும் ஆனந்த சாகரமூழ்கிய முழு மனதோடு என்றும் அழியாத பேரின் வாழ்வை யடைய குமர குருநாதன் அருள் புரிவாராக.

சுபம், சுபம், சுபம்.

**M.** சுப்பிரமணிய அய்யர்,
உபாத்தியாயர், சக்கரமல்லூர், ஆற்காடு.

---

## ஒற்றுமை

பூர்வகாலத்தில், நமது முன்னோர்கள் ஒற்றுமையுடன் இருந்து வாழ்ந்து வந்தார்க ளென்பது வெளிப்படை. தங்களுக்குள், ஏதேனும் ஒரு விவகாரம் ஏற்பட்டு விட்டால், பட்டக்காரர், பாளையக்காரர், பெரிய தனக்காரர், செட்டிமைக்காரர், மணியக்காரர், நாட்டாண்மைக்காரர், கொத்துக்காரர், என்று பல பட்டப் பெயர்களைப் பெற்ற பெரியமேதாவிகளை வைத்துக்கொண்டு தங்களுக் குள்ளாகவே அந்த விவகாரங்களைப் பைசல்செய்து கொள்வார்கள்.

இக்காலத்திலோ அப்படி யில்லாது சிலர் வீண் சண்டைகளைச் செய்துகொண்டு கோர்ட்டுக்குப்போய் பாட்டன் பூட்டன் தேடிவைத்த சொத்துக்களை குமஸ்தாக்களுக்கும், வக்கீல்தாரகர்களுக்கும், கொடுத்துத் தங்களுக்கு அநுகூல மாகாவிட்டால், இன்னும் மேல்கோர்ட்டுக்கு என்றும், கீழ்க்கோர்ட்டுக் கென்றும் போய்ப் பணத்தை வாரியிறைத்துவிட்டுச் சிவசிவாவென்று வீட்டுத் திண்ணையின்மேல் ஒரு புறமாகக் குந்தியிருப்பர்.

தற்காலத்திலும் கூட, குடும்பர்கள், குயவர்கள், தொட்டியர்கள் ஆகியவர்களுக்குள் கட்டுப்பா டிருக்கின்றது. இவர்களது ஜாதிக் கட்டுப் பாடுகளை என்னென் றுரைப்பது. இந்த ஜாதியாருக்குள் ஏதேனும் குற் றங்குறைக ளுண்டாயின் அதைத் தீர்த்துக் கொள்வதற் கென்றே இவர் கள் வருஷம் ஒரு முறையேனும், அல்லது இரு முறையேனும், மஹா நாடுகள் கூடி, அவர்களுக்குள் முதன்மையான பெரியதனக்காரன், நாட்டாண்மைக் காரன், பெரிய பூசாரி, சின்னப் பூசாரி, இவர்களை வைத்துக் கொண்டு அந்த விவகாரங்களைத் தீர்த்துப் பைசல்செய்வதும் தவிர தப்பிதம் செய்தவர்களுக்கு அபராதம் போட்டு வசூல்செய்து அங்கு வந்திருக்கும் உறவின் முறையோர்களுக்கு அந்தப் பணத்தைக் கொண்டு விருந்து முதலிய வற்றிற்குச் செலவிட்டுப் பிறகு இந்தவிதமான குற்ற ங்களைச்செய்யக்கூடாது என்றும், இன்னவிதமாய் நடந்துகொள்ளவேண் டும் என்றும் கட்டுப்பாடு செய்துகொண்டு போவார்கள்.

இவ்விஷயத்திற்கு அறிகுறியாக நேற்று, கருவூருக்கு அடுத்த மணியம் பாளையம் என்னும் கிராமத்தில் குயவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து கூட் டங்கூடி, அக்கூட்டத்தில் தங்கள் ஜாதியின் முன்னேற்றத்திற்கான பல விஷயங்களையும், பழைய வழக்கங்களை அறவே ஒழிப்பதையும், இனிமேல் இதரஜாதியாரிடம் நடந்துகொள்ளவேண்டிய சமரசதத்துவத்தையும் கைக் கொள்ள வேண்டியதையும் பற்றிப்பேசி அதன்படி முடிவுசெய்து கூட்டம் கலைந்தார்கள்.

அவ்வூர்............கவுண்டர் என்ற ஒருவர் வீதிவழியாய்ப் போகும் போது இவரைக்கண் ணுற்ற குயவனொருவன் பழைய ஏற்பாட்டின்படி கும்பி டாமலும், கைகட்டி வாய்பொத்தி நிற்காமலும், மௌனமாகவே யிருந் தான். உடனே கவுண்டருக்கு மீசைநீண்டு, கோபாக்கினி கொழுந்துவிட அவர் சினங்கொண்டு சீறி, "அடா! அற்பக்குசப்பயல்களே! ஏது உங்க ளுக்கு இவ்வளவு ஆணவம்? உங்கள் குலத்துக் குண்டான மரியாதை கொஞ்சமேனும் காட்டாமல் இருக்கிறீர்களல்லவா? உங்கள் ஜாதிக்கட்டுத் திட்டமா? பார்க்கலாம், நாளை ஊரில் குடியிருப்பது" என்று அக்கோபத் தோடு பேசிக்கொண்டே வீடுசென்றார். கவுண்டர் வீடு சென்றாரோ இல் லையோ? வேலையாட்கள் சிலர் ஓடோடியும் வந்து குயவன் சூளையிலுள்ள பாண்டங்களை உடைத்தும் வீட்டைப் பிரித்தும் குயவனை அடித்து வெளி யில் துரத்திவிட்டனர்.

அந்தோ! பரிதாபம்! தன் ஜீவனோ பாயத்திற்காகச், செய்து வைத்த பாண்டங்களை யிழந்தும், அடியுண்டும், அவஸ்தையுற்ற குயவன் வழியின் றித் திகைத்து "ஏழை அழுத கண்ணீர் கூறிய வாளோடொக்கும்" என் பது போல் தன் இனத்தார்களுடன் சொல்லி முறையிட்டு அழுதான். இதைக்கேட்ட குயவர்க ளெல்லாம், ஷை கவுண்டருக்குச் சட்டிப்பானைகள் போடக்கூடாது எனக் கட்டுத் திட்டம் செய்து விட்டார்கள்.

இந்து ஜனங்களுக்குக் குயப் பாண்டம் சுபத்திற்கும், அசுபத்திற்கும் உரித்தான தாகையால் மண் பாண்ட மகப்படாத கவுண்டரது பாடு திண் டாட்டமாய் முடிந்தது. அவர் என்னசெய்வார்? குயவர்களது ஒற்றுமையைக் கண்டுமது அதிகாரம் இனிக்குயவர்களிடம் செல்லாது எனத்தீர்மானித்த கவுண்டர் குயவர்களிடம் போய் கஷ்ட நஷ்டங்களுக்கு நான் பாத்தியப்

படுகிறேன். முன்போலவே எனக்கும் சட்டிபானைகள் போட்டு வரவேண்டும் என்று மரியாதையோடு பேசி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

குயவர்கள் குலம், கல்வி, செல்வம், இம்மூன்றிலும் தாழ்வு பெற்றிருந்தாலும், ஒற்றுமையாலல்லவோ, உயர்வெய்தினர். கவுண்டர்மேற்சொன்ன மூன்றிலும் சிறப்புற்றவராக விருந்தும், ஒற்றுமைக்குறைவாலன்றோ தாழ்வு பெற நேர்ந்தது. நாம் நம்மிலும் சிலர் தாழ்வு பட்டவர்களென்று எண்ணுவதும், அவர்களை ஏவலாளர்களாக எண்ணி இழிவு செய்தலும், கடவுள் நம் நிமித்தமே அன்னவர்களைப் பிறப்பித்தாரென எண்ணுவது போலாகுமன்றே?

அந்தோ! கல்வியிலும், குலத்தொழிலிலும், தாழ்ந்து கிடப்பவர்களைத் தட்டி யெழுப்பி உயர்வு படுத்துவதற்கு எத்தனையோ மஹான்கள் கங்கணங் கட்டிக்கொண் டிருக்க வில்லையா? அதை இவர் அறியார் போலும்? அன்னோர்களல்லவா உலகம்போற்றும் அன்பும், சமரச தத்துவமும் உடையவராவர்!

சகோதர, சகோதரிகளே! நாம் கடவுளுக்கு மாத்திரம் கீழ்ப்பட்டவரென எண்ணி நம்மில் ஒருவர்க் கொருவர் தாழ்ந்தவ ரென்றும் உயர்ந்தவரென்றும் எண்ணாமல் யாவரிடத்தும் அன்புடனே ஒற்றுமையாக உலகம் போற்ற வாழ ஒப்பற்ற முதல்வனை மனத்தில் வைத்துப் போற்றுவோமாக. சுபம், சுபம்.

S. V. பழனியப்பன், சாலியாபாளையம்.

---

## ஆதாரமெது? கவர்ன்மெண்டார் கவனிப்பார்களா?

நமது ஆனந்தனது அன்பர்களான சந்தாதாரர்களில் பெரும்பாலார், தேசமுன்னேற்றத்திற்குப் பாடுபடுபவராகவும் அதிகாரிகளாகவும் இருப்பரென்று நம்புவதால் அவர்கட்கு அடியிற் காணும் சில விஷயங்களை அறிவிக்க வேண்டுமென்பது கருதியும், தேச முன்னேற்றத்தின் அவசியத்தைக் கருதியும், அவர்கள் இவ்விஷயங்களை அறிந்திருக்கவேண்டு மென்பது கருதியுமே இவற்றை நமது ஆனந்தனுக்கு அறிவிக்கலானேன். ஆனதுபற்றி, நமது ஆனந்தன் அவ்விஷயங்களைத் தனது, வெள்ளிய முத்தையும் பழிக்கும் கரங்களிலேந்தி, தனது வளர்ச்சிக்கும் அத்தியா வசியமான அன்னையாம் ஆரம்பக் கல்வியின் விசேடத்தையுன்னி அனைவருக்கும் அறிவிப்பானென நம்புகின்றேன்.

நமது பிரிட்டிஷ் ஆட்சியிலுள்ள சகல இலாகாக்களுக்கும் ஆதாரம் எது வெனவினவின், படிப் பென்றே விடை கிடைக்கும். இப்படிப்பிலும் ஆரம்பம் (எலிமெண்டரிப்) படிப்பா? (ஹயர்) உயர்தரப் படிப்பா? இவைகளினுலுண்டான அதிகார உத்தியோகங்களா? எனின், எலிமென்டரிப் படிப்பே என்பதை மறுக்கொண்ணுது. ஆகவே, ஆட்சி மாட்சிமையுற வேண்டுமெனின், எலி மெண்டரிப் படிப்பன்றோ அத்தியாவசிய மானது! அதையன்றோ வீட்டிற்கு அஸ்தி வாரத்தைப்போல் பலமாயமைக்கவேண்டும்! எலிமெண்டரிப் படிப்புக்கு ஆதாரமாயுள்ள ஆரம்ப ஆசிரியர்கள், ஆடிக் காற்றில் பறக்கும்போது ஆரம்பப்படிப்பு எவவிதம் அபிவிருத்தியாகும்?

எவரேனும் ஆரம்பப்படிப்பு ஆசிரியரிடம் அ. என்ற அட்சரம் கற்காமல், உயர்தர இலாகாவுக்கு வந்து விட்டோமென்று கூறமுடியுமா? அ. என்ற அட்சரத்தைக்கற்க, ஆரம்பப்படிப்பு ஆசிரியர்கள் அவசியமில்லை யென்பார்களா? 'ஹரி ஓம், நன்ருக, குருவாழ்க, குருவேதுணை', என்ற நம் நாட்டின் குரு பக்தியை மறந்தனர்களா ? ஆங்கிலர்களும் அப்பக்தியை மதித்தே, அன்னவர் நாட்டு ஆரம்ப ஆசிரியர்களின் அத்தியா வசியத்தையும் உணர்ந்தே, அங்கு அவர்களைத் தக்க நிலைமையில் வைத்திருக்கின்றன ரென்பதும் உணரற்பாலது!

ஆட்சிபுரியும் ஆங்கிலர்க்கு வழி காட்டிகளாயுள்ளவர்களும் நம்மவர்கள் தானே ! தற்கால நிலைமையில் ஆங்கிலர்கள் அரசரும், நம்மவர்கள் மந்திரிகளும் போலவன்ரே! தங்கள் நிலைமைக்குத் தாயகமாயுள்ள ஆரம்பப் படிப்பு, ஆசிரியர்களை நம்மவர்களேனும் கவனிக்கின்ருர்களா ? 'அரசனுக்குச் செவியே கண்' என்பது போல், மந்திரிகளாயுள்ள நம்மவர்கள் உள்ள விஷயத்தை, அரசர்க்கும் அதிகாரிகட்கும் அறிவிக்கின்றனரா ? கால நிலையை உணர்ந்து உரைத்த சம்பளக் கமிட்டியாரின் அபிப்பிராயத்திற்கு மாருக, ஆரம்ப ஆசிரியர்களுக்கு அத்தொகை மிக அதிகமென்று நமது சென்னைச் சட்ட சபையில் ஓர் உத்தியோக மில்லாத கனவானும் உரைத்திருக்கின்றனரே? தேச முன்னேற்றத்தில் முன்ஞேக்குள்ளோர், தேச முன்னேற்றத்திற்கு மூலகாரணம் ஆரம்பப்படிப் பென்றும், இதற்குக் காரணராயுள்ளோர் ஆரம்ப ஆசிரியர்களே யென்றும், இவர்களாலேயே தேசம் முன்னேற்றமடைய வேண்டு மென்றும் சொல்லும்போது, அவ்வாசிரியர்கள் காலநிலைமை அரைவயிற்றுக்கும் போதாத ஆகாரத்திற்குரிய குறைந்த சம்பளத்தைப் பெற்று, குறைந்த ஆகாரத்தையுண்டு, தேகதிடம், மனேதிடம், ஊக்கம், உற்சாகம் குன்றிப் போதிப்பதனுல், தேசம் முன்னேற்றமடைந்துவிடமுடியுமா? என்று கவனித்தார்களா? கவனிப்பார்களா? இவர்கள் அவ்வதிகாரிகளுச்கு இணங்கவே, அவர்களின் போக்கை அனுசரித்து, அவர்களின் பிரியத்தையும் மதிப்பையும் பட்டங்களையுமன்ரே எதிர்பார்க்கின்றனர்! என்னே தேசாபிமானக் கொள்கை ? இவர்கள் தாயின் அருமையை அறியாரோ? அறிந்தவரே யெனினும், மேற்கூறிய மயக்கங்களிலும் சுயகாரியங்களிலும் மயங்கிக்கிடக்கின்றனர்கள்போலும்! தாயகத்தின் அவசியத்தை ஆங்கிலருமறிந்து, ஆங்கில நாடாகிய இங்கிலாந்தில் எவ்வித நிலைமையில் ஆரம்ப ஆசிரியர்களை வைத்திருக்கின்றனரென்று அறியார்களோ? அவர்கள் மாதம் 40-பவுனுக்கு (600 ரூபாய்க்கு)க் குறையாதவர்களென்று அறிந்தவர்களே ! ஆனல் மயக்கம்!

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று அன்னையையே அதி முக்கியமாகக் கூறப்பட் டிருக்கின்றது. இதை ஆங்கிலேயர்கள் தான் மறுப்பார்களா ? ஆங்கிலங் கற்ற இந்திய ஆங்கிலர்கள்தாம் மறுக்கக் கூடுமா? 'தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை' யென்பதும், ஆன்ருேரின் அரும் பெரும் அமுத மொழியன்ரே ! தாயின் பெருமை இவ்விதமிருக்கத் தங்கள் பதவிக்கும் ஆட்சிக்கும் தாயகமாயும், ஆரம்பக் கல்விக்குக் காரண பூதராயு முள்ளவர்களைக் கவனியா திருப்பது, தாயைக்கவனியாதது போலன்ரே.

கவர்ன்மென்டாரின் 476-ம் நெம்பர் உத்தரவில் அவர்கள் சம்பளக் கமிட்டியார் சிபார்சு செய்தபடி தற்காலம் கொடுக்க முடியவில்லை. உபாத்தியாயர்கள் ஸ்தல ஸ்தாபனங்களின் ஊழியர்கள். ஆகையால் அது விஷயமான செலவைக் கவர்ன்மெண்டார் ஒப்புக் கொள்ள முடியாது' என்கிறார்கள். ஸ்தலஸ்தாபனங்களுக்கும் கவர்ன்மென்டாருக்கும் சம்பந்தமில்லையா? பாத்தியமே யில்லையா? ஸ்தல ஸ்தாபனங்கள் ஆதரிக்கும் எலிமென்டரிப் படிப்பு இல்லாமலா, கவர்ன்மென்டு ஆட்சி நடக்கிறது? இப்படியிருக்க, தங்க ளந்தஸ்துக்கும் உயர்ந்த ஆட்சிக்கும் அடிப்படையான தாயகமாகிய எலிமென்டரிப் படிப்பைக் கைவிடலாமா?

தற்காலம் போதிய சம்பளங் கொடுத்து உதவி செய்ய முடிய வில்லையென்றால், பப்ளிக் சர்விஸ் கமிஷன் சிபார்சு செய்திருந்ததைஅனுசரித்து, 1911-ம் வருடத்திலிருந்து நீதி இலாகாவிற்கும் டிப்டி கலெக்டர் முதலியவர்கட்கும் சம்பளத்தை உயர்த்துவதற்குப் பண மிருக்கும்போது, நீதியிலாகா அதிகாரிகள் டிப்டி கலெக்டர்கள் முதலியவர்களின் அந்தஸ்தை உயர்த்துவதற்கு ஆதாரமா யிருந்த, ஆரம்பப் படிப்பு ஆசிரியர்கட்கு இல்லாது போயிற்றா? யுத்தத்திற்கு முந்திய 1911-ம் வருடத்தில் அவர்கட்கு என்ன கஷ்டம் நேர்ந்து விட்டது? யுத்த காலத்தில்தான் அப்போது பெற்றுவந்த சம்பளத்தால் மீதிசேர்த்துவைக்கமுடியாதே தவிர, கஷ்டமா வற்படப்போகிறது? ஆகாரத்திற்கு வேண்டிய சம்பளம் பெறவில்லையா? ஆகாரத்திற்குப் போதிய சம்பள மில்லாமல், மிக்க கஷ்டத்திலும் கஷ்டத்தை அனுபவித்தவர்கள் - அனுபவிப்பவர்கள் கீழ் தர உத்தியோகஸ்தர் (வேலைக்காரர்)கள் அன்றோ! காலத்திற்கும் சமயத்திற்கும் எப்போதும், அவர்கள் அதிகக் கஷ்டத்தையேபட முடியுமோ? அவர்களுக்கன்றோ சம்பளத்தை உயர்த்திக்கொடுத்து அவர்களை ஆதரித்து, நிலைமை கெடாமல் செய்யவேண்டும்? இவ்வித யுக்தாயுக்த மறியாமல், ஸ்தலஸ்தாபனங்களின் செலவைகவர்ன் மென்டார் ஒப்புக்கொள்ளமுடியாதென்றால், ஸ்தல ஸ்தாபனங்கள் தாங்களாகவே யாதாமொன்று செய்துவிட்டால், கவர்ன்மென்டார் கேட்காமல் விடுவார்களா? மேற் பார்வை பார்ப்ப தென்பது மட்டும் எதற்கு? கஷ்டம் வந்தபோது யுக்த மறிந்து உதவி செய்ய வேண்டாமா? கவர்ன்மேன்டு உத்தியோகஸ்தர்கட்கும்,லோக்கல் முனிசிபல்போர்டுகளின் உத்தியோகஸ்தர்கட்கும் வெவ்வேறு ஆத்மாவா? வெவ்வேறு ஆட்சியா? எல்லாம் பெரும்பான்மையாகப் பார்ப்பின், ஒரே பிரிட்டிஷ் ஆட்சி தானே! ஒரே பிரிட்டிஷ் ஆட்சியில் ஒரு வகையினரின் கண்ணுக்கு வெண்ணெயும், மற்றொரு வகையினரின் கண்ணுக்குச் சுண்ணாம்புமா? பிரஸ்தாப விஷயம் அப்படித் தானே இருக்கின்றது! சமீபத்தில் மேன்மை தங்கிய கவர்னர் துரை யவர்களின் தலைமையின் கீழ் நடந்த, லோகல் முனிசிபல் கான்பரன்சிலுங்கூட அதிகச் சம்பளம் பெற்றுச் சுகமாய் ஜீவிப்போர்க்கே நன்மை யேற்பட்ட தென்றும், மிகச் சொற்ப சம்பளம் பெற்று மிகக் கஷ்டத்தோடு கஷ்டத்தை அனுபவிப்போர்க்கு யாதொரு நன்மையும் ஏற்படவில்லை என்றும் தெரிகிறது. சமத்வம் எங்கே? என்னே ஆட்சியின் முறை!

ஆகவே, அனைத்துங் கடந்த அப் பரம்பொருளானவர், அறையவொண்ணா அல்லலை அனுபவிக்க வேண்டி யிருக்கும் இக் காலத்திற்கு, உதவி யிருக்கும் நான்கு ரூபாய் மிகச் சொற்ப மென்பதையும், சம்பளக் கமிட்டி

யார் தீர்மானித்த அளவேனும் கொடுக்கும் படியான கருணையை, ஆட்சியினரின் இருதயத்தில் ஏக விடுத்து அருள் செய்யுமாறு பிரார்த்திக்கின்றேன்.

P பரிமணப்பல்லவராயர்,
ஹெட்மாஸ்டர், போர்ட் ஸ்கூல், உத்தமச்சேரி,
திருவளர் சோலை போஸ்டு, திருச்சி ஜில்லா.

குறிப்பு—ஆரம்பக்

குறிப்பு:—ஆரம்பக் கல்வி உபாத்தியாயர்களின் நிலைமை பரிதாபமான தென்பது ஒருவரும் மறுக்கொணு நியாயமேயாகும். இவ்வாறிருக்கப் "போதன விஷயப் பூங்கொத்து" என்ற சஞ்சிகையில் மேற்கண்ட நமது நண்பர் பரிபணப்பல்லவராயர் அவர்கள் எழுதிய சில விடயங்களுக்கு விடையாக,

"சரியான சம்பளம் பெறுவோரும் கவலையோ டிருக்கலாம், திடமனதற் றிருக்கலாம்; இதற்குக் காரணம் சம்பளக் குறைவு மட்டுமன்று" என்று கூறப்பட் டிருக்கிறதாம். அந்தோ இது என்ன வேடிக்கை? நாள் முழுதும் ஆகாரமில்லாது ஒருவன் களைத்துப்போ யிருக்கிறான் என்றால், "அவனுக்கு முன்னே கொஞ்சம் ஆகாரம் கொடுக்க வேண்டும் என்பதை விட்டு, ஆகாரம் உடையவன் கூட ஆயாச மடையலாம். அவன் ஆயாசத்துக்கு ஆகாரமின்மை மட்டும் காரணமல்ல" என்பது மிக்க நீதியான தலைகீழ் வாதமல்லவா. இன்னும் அதே சஞ்சிகையில் "போதிய சம்பளம் கிடைக்கு மட்டும் ஊக்கம் குன்றி யிருப்பதை விட, ஊக்கத்தோ டுழைத்துப் போதிய சம்பளம் கேட்பது கௌரவம்" என்று கூறப்பட் டிருக்கிறதாம். அடடா? என்ன நீதியான புத்திமதி! என்ன கருணையான தீர்மானம்! போதிய ஊக்கமும், உற்சாகமும் இருப்பதாயின் அவர்கள், என் சம்பளம் போதாதென்று கூறுகிறார்கள். மேலே ஏறமுடியவில்லை, ஏணி உயரமில்லை உயரமான ஏணி வேண்டும் என்றால் 'சே சே! மேலேயேறி விட்டுப் பிறகு ஏணிகேள்" என்பதுபோ லன்றோ விருக்கிறது!

இது எதிரியின் கஷ்டத்தை யறியாது வாக்கு சாமார்த்தியம் காட்டுவதன்றி வேறென்ன? நமது நாட்டில் தேச நன்மைக் குழைக்கவென முன்வருவோரிலும் இத்தகைய நியாயதுரந்தரார்கள் இருந்தால் நம் நாடு எக்காலத்தில் எவ்வாறு க்ஷேமமடையப்போகிறதென்று மிகவும் விசனிக்கிறோம்.

நாகரீகமடைந்த இக்காலச் சீர்திருத்தம் பத்துவித பலகாரங்களோடும், பதார்த்தங்களோடும் உண்பவனுக்குக் கடைசியில் பாயாசம் இல்லாவிட்டால் சரியல்லவென்று பாயாசமளிப்பதும், வெறும் சாதம்வைத்திருப்பவன் மிளகு நீர்கேட்டால், குழாய்சலம் கொடுப்பதும் போல் இருக்கிறது

தக்க (சட்ட சபை யங்கத்தினர் முதலிய) அந்தஸ்தில் உள்ள நம்மவர்களே இந்த ஆரம்பக்கல்வியின் அபிவிர்த்தியையும் அதன் மூலமாய் நமது தாய் நாட்டின் க்ஷேமத்தையும் கருதி இந்த உபாத்தியாயர்களுக்குத் தக்க சம்பள மளிக்க முயற்சி செய்யாவிட்டால், மற்ற விஷயங்களிலெல்லாம் தேசத்தை முன்னுக்குக் கொண்டு வருகிறோம் என்று இவர்கள் பாடுபடுவது என்பயனளிக்குமோ நமக்குப் புலப்படவில்லை. எல்லாம் வல்ல

பரம் பொருளே இவ்விஷயத்தில் கருணைபுரிய வேண்டுமாய் மனதாரப் பிரார்த்திப்போமாயின் நம்பினவரைக் கைவிடாத அவரால் ஆகாத காரிய மொன்றுமில்லை. பத்திரிகாசிரியர்.

---

## முதலுக்கே மோசம்

நமது அன்பார்ந்த இந்து சகோதர சகோதரிகளே! இந்த விஷயத்தைத் தயவு செய்து சிரத்தையோடு வாசிக்க வேண்டுமாய் உங்களைப் பிரார்த்திக்கிறோம். நமது வியாசத்தின் தலைப் பெயரைக் காணும்போது "ஏ! என்ன அப்படிப்பட்ட பிரமாதம்-விபரீதம்-நேர்ந்து விடப் போகிறது?" என்று கருதுவீர்கள். ஆனால் அவ்வார்த்தைகள் அளவு மீறியாவது கொஞ்சத்தை யதிகமாகவாவது கூறுகிறவை யல்ல. இந்துக்களாகிய நமக்கு அதனினும் பிரமாதமானதும் விபரீதமானதும் வேறொன்று மில்லை.

இந்துக்களாகிய நமக்கு எது யாவற்றினும்-உயிரினும்-சிறந்தது? நமது முன்னோர்கள் தங்கள் சொத்து, சுதந்திரம், பிராணன், எவைபோவதாயினும் திரணமாக மதித்து எந்த ஒன்றை மட்டும் விடாமல் காப்பாற்றினார்கள்? மதத்தையே என்று சிறு குழந்தையும் கூறும். மதமே நமக்குக் காணி பூமி பொருள் உயிர் யாவற்றினும் சிறந்தது. என்றும் அழியமுடியாத இயற்கையான சத்தியத்தையுடையதும், உலகில் இப்போதுள்ளவும், இனித்தோன்றக்கூடியனவுமாகிய எல்லாமதங்களுக்கும் அஸ்திவாரத்தை யுடையதும் இந்து மதமே. இதில் விவரிக்கப்படாத ஒரு மதம் உலகில் இல்லை. இனியிருக்கவு முடியாது. ஒப்புயர்வற்ற நமது மதமே நமது ஒற்றுமைக்கு முதல் ஆதாரமாக விருக்கிறது. இந்துக்கள் இவ்வுலக போக பாக்கியங்களை இகழ்ச்சியாகக் கருதி, ஆன்மார்த்தத்தையே அடைய வேண்டிய அவசியப் பயனாகக் கருதுவோர். ஆன்ம லாபத்தின்முன் மூவுலகையும் ஏக சக்கிராதிபதியாய் ஒரு குடைக்கீழ் ஆளும் இராஜ போகத்தையும், பொன்னாட்டிற்கிறையாகிய இந்திரன் போகத்தையும் ஒரு துரும்பாக மதிப்பவர்கள்.

"சங்கநிதி பத்மநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோம்
* * * *"

என்ற மனவுறுதி யுடையவர்கள்.

இந்துக்களாகிய நமக்கு யாவற்றினும் முக்கியமானதான நமது மதத்திற்கே மோசம் வரும்போ லிருக்கிற தென்பதே இப்போது நாம் எழுதத் துணிந்த விஷயம். நமது நாட்டிலுள்ள தாழ்ந்த வகுப்பாரில் அனேகர் அன்னிய மதக் குழியில் விழுந்து விட்டார்கள் என்பது யாவரு மறிந்த விஷயம். நாமோ நமது மதத்தை யொருவர்க்கும் வலியப் போதித்து நமது மதத்தில் வந்து சேரும்படி அழைப்ப தில்லை. பிறரோ பொருட் செலவு செய்து, பலவித உலக ஆசைகளைக் காட்டி நம்மவரை மயக்கித் தங்கள் மார்க்கத்திற்கு இழுத்துக்கொள்ளும் வேலையில் மிக்க சிரத்தை யெடுத்துக் கொள்கிறார்கள். அத்தொழில் நமது நாட்டில் ஏறக்குறைய எங்கும் ஒரு நிதானமாக நடந்து வருகிறது.

இப்போது அமெரிகாவிலுள்ள புரொடஸ்டான்ட் பாதிரிமார்களெல்லாம் கூட்டம் கூடி பெருந் தொகையான பணத்தைச் செலவு செய்து ஐந்து வருடங்களுக்குள் இந்தியாவிலுள்ள இந்துக்கள், புத்தர், சமணர், மகம்மதியர் முதலிய எல்லாரையும், இன்னும் உலக முழுமையுமே, கிறிஸ்தவர்களாக்கிவிடத் தீர்மானித்து அதற்காகப் பெரு முயற்சி எடுத்துக் கொள்கிறார்களென்று அறிகிறோம். இச் சென்னையில் வசிக்கும் செல்வச் சீமானாகிய லாட் கோவிந்ததாஸ் அவர்கள் இவ்விஷயத்தை யறிந்து மனந் தாளாது உடனே அது விஷயமாகத் தக்க ஜாக்கிரதை யெடுத்துக் கொள்ளும்படி ஹிந்து பத்திரிகையின் மூலமாக நம்மவர்க்கு அறிவிக்கிறார். ஜுலை மாதம் 13௳ வெளிவந்த ஹிந்து பத்திரிகையில் அவர் எழுதியுள்ள விஷயத்தை அதன் தலையங்கத்தோடு சுருக்கி இங்கு வரைகிறோம்:—

"இந்து மதத்திற்குப் பெரிய ஆபத்து"

உலகத்திலுள்ள எல்லா மதத்தினரையும் கிருஸ்தவர்களாக்கிவிட வேண்டுமென்று அமெரிக்காவில் பிரமாதமான முயற்சி செய்யப்பட்டு வருகிறதென்றும், அதற்காக அங்கிருந்து ஒரு பெருங் கூட்டமான பாதிரிமார் இந்தியாவிற்கு வரப்போகிறார்களென்றும் கொஞ்ச நாட்களுக்குமுன் பத்திரிகைகளில் கூறப்பட்டிருந்த விஷயத்தைப் பொறுப்பாளிகளான இந்துக்கள் உணர்ந்தார்களோவென்று நான் வியப்படைகிறேன். உலகிலுள்ள எல்லா மதஸ்தர்களையும் ஐந்து வருடங்களுக்குள் கிருஸ்தவர்களாக்கி விடவே பெரும்போர் போன்ற ஒரு முயற்சி அமரிகப் பாதிரிமார்களால் செய்யப்படுகிற தென்றும், அதற்காக வேலை செய்ய 30 வகுப்புகளைச் சேர்ந்த 1 கோடி 95 இலட்சம் கிருஸ்தவர்கள் தங்கள் முயற்சிகளை யொன்றுசேர்த்து இதற்கு உழைக்கப் போகிறார்களென்றும் கூறப்படுகிறது. வேலை செய்யும் முறைமையும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறதாம். இதற்காக இருபது கோடி அறுபது லட்சம் ரூபாய் செலவிற்கென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தியாவிலுள்ள இந்துக்களை மட்டுமல்ல, மஹம்மதியர், புத்தர், சமணர், யூதர், ஸொராஸ்ட்ரியர் (அக்னியுபாசகர்) யாவரையும் கிருஸ்தவராக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்.

நம்மவரில் அனேகர் இந்த ஆபத்தை யறியாமலே யிருக்கிறார்களென்பது விசனிக்கத் தக்கதாக விருக்கிறது. அது நேரிடும்போது அதைத் தடுக்கவும் நாம் ஆயத்தமாக இருப்பதில்லை. அதைத் தடுப்பதற்கு நாம் கொஞ்சங்கூட ஆயத்தமாக இல்லாத வரையில் பாதிரிகள் செய்யும் இப் பிரம்மாண்டமான முயற்சி அஞ்சத் தக்கதே யென்று நான் கருதுகிறேன் தாழ்ந்த வகுப்பைச் சார்ந்த கல்வியில்லாத ஜனங்களுக்குப் பெருந் தன்மை வாய்ந்த நமது மதக் கொள்கைகள் தெரியாமலிருப்பதால் அவர்களை நமது மதத்தை விட்டு இழுத்துக் கொள்வது பாதிரிமார்களுக்குச் சுலப மாகும். இந்து மதம் ஒவ்வொரு இந்துவுக்கும் விலை மதிப்பில்லாத ஒரு சிறந்த பொக்கிஷமாகும். இந்துக்களுக்கு அவர்கள் மதமே மற்ற யாவற்றினும் சிறந்தது.

ஆயினும் மதத்தைப் பரவச்செய்ய அவ்வளவுபணம் என்னத்திற்கு என்பது நமக்கு விளங்கவில்லை. மதம் மனப் பூர்வமான பிரியத்தையும், சத்தியமான நம்பிக்கையையும், பக்தியும் சன்மார்க்கக்கொள்கைகளும் பொரு

ந்திய மனப்பற்றையும் முழுதும் பொறுத்தது. நமது இந்து மதம் பணசம் பந்தத்தை வேண்டாத பெருந்தகைமை வாய்ந்தது. நமது மதவிஷயத்தில் பண சம்பந்தமான விவகாரமே கிடையாது. ஆகையால் நமது மதத்திற்கு 20 கோடி பைசாக்கள்கூட வேண்டுவ தின்றும். நமது மதத்திற்குவேண்டியது மனிதனுடைய ஆன்மலாபத்திற்கு அவசிமான மெய்ப்பக்தியும், மனப் பூர்வமான நம்பிக்கையும்,உலக சம்பந்தமான இழிவான இச்சைக் கலப்பில்லாத அன்புமே யாகும்.

ஒருசமயம் பலவிதமான (ஆசை காட்டும்) தூண்டுதல்களால் 5-கோடி பஞ்சமர்கள் தங்கள் மதத்தை விட்டுக் கிருஸ்து மதத்தில் சேரும்படி போதிக்கப்படலாகும். ஆனால் பஞ்சமர்களுடைய மனச் சாக்ஷியில் தங்கள் பூர்வீக மதமான பரிசுத்த இந்து மதத்தின் சுடர் பிரகாசிக்கும்படி தூண்டி விடப்பட்டபோது,தாங்களும் இந்துக்கள் என்ற ஒருபெரிய உன்னதமான ஜாதியைச் சேர்ந்தவர்களே யென்று அவர்கள் உணரத் தொடங்கியபோது, ஒரு பக்கம் பிராமணரும் கூடிய மற்ற இந்துக்கள் கல்வியால் அவர்களை உயர்த்தி இலௌகிகத்தில் மேலான நிலைமைக்குக் கொண்டுவரப் பிடிவாதத்தோடு முயற்சி யெடுத்துக் கொண்டு உழைக்கும்போது, மற்றொரு பக்கம் அவர்களுக்கு மத போதனையும் ஞான போதனையும் செய்ய முன் வந்திருக்கும் இக்காலத்தில், அற்ப ஆசைகளாகிய தூண்டுதல்களுக்கு மயங்கி ஒப்புயர்வற்ற தங்கள் மூதாதைகளின் அஞ்திமதத்தை அவர்கள் கைவிடத் துணியமாட்டார்க ளென்பது நிச்சய மென்று நம்புகிறோம். சுத்த அனுதைகள், தீநெறியால் ஜனசமூகத்தினின்று விலக்கப்பட்டவர்கள்,எதற்கு முதவாப் பயனிலிகள், இத்தகையோர் சிலர் தம்மதத்தை விட்டுச் சென்றால் செல்லலாகும்.

பஞ்சம சகோதரர்களில் பலர் இப்போது கல்வியிற் றேர்ச்சி யடைந்து துரைத்தனத்தில் பொறுப்பான பதவிகளை வகித்திருப்பதோடு, நகரச் சங்கங்களிலும் (முனிஸிபாலிடி) தாலூக் போர்ட், ஜில்லா போர்ட், சட்ட சபை (லெஜிஸ் லெடிவ் கௌன்ஸில்)களிலும், அவயவிகளாயிருந்து வருகிறார்கள். பூரண சுயாதீனமான வழியில் ஜீவிக்கும் அத்தகையோர் இந்தப் பாதிரிமார்களின் போதனைக்குச் செவி கொடுக்கும் அவ்வளவு மன வுறுதி யற்றவர்களாய் ஒரு போது மிரார்கள். அதோடு தம்மினத்தைச் சேர்ந்த மற்ற சகோதர சகோதரிகள் அன்னிய மதக் குழியில் விழாமல் இருக்கும் வண்ணம் தக்க ஜாக்கிரதை யெடுத்துக் கொள்வார்கள். இந்து சமூகத்தார் பாதிரிமார்கள் இந்து மதத்திற்கு இடையூறு செய்வதைத் தடுத்து அதற்கு இடங் கொடாமல் இருப்பதற்கு வேண்டிய முயற்சிகளை யெடுத்துக்கொள்ள வேண்டும்.

நான் இதை யெழுதும் போது இந்து பத்திரிகையில் ஒரு ரோமன் காதலிக் பாதிரியார் மேற்கண்ட அமெரிக புரொடஸ்டான்ட் பாதிரிமார்களின் செய்கையை ஆக்ஷேபித்துக் கூறும் ஒரு வியாசத்தைக் காண மிக்க சந்தோஷ மடைகிறேன். அவர் இந்தியாவின் தென்னாட்டில் அத்தகைய கிருஸ்துமத குருமார்களின் ஆக்ஷியைத் தாபிப்பதால் இங்குள்ள ரோமன் மார்க்கத்திற்கு மிக்க இடையூறுண்டாகும் என்ற காரணத்தால் அதைக் கண்டித்துக் கூறுகிறார்.

இவ்வாறு யாவரையும் கிருஸ்தவராக்கும் பொறுப்பை யேற்றுக்கொள்வது ஆகாதகாரியம் என்று அவர் கூறுகிறார். * * * *

* * * * * *

நண்பர்களே சகோதர சகோதரிகளே! இவ்விஷயத்தைப் பற்றி மனம் பதைத்து நம்மனைவர்க்கும் அறிவுறுத்தும் ஸ்ரீமான், லாட். கோவிந்த தாஸ் அவர்களுக்கு நாம் மிக்க நன்றியோடு வந்தன மளிக்க வேண்டும். இனி இதற்கு நாம் என்ன செய்ய வேண்டு மென்பதைச் சிந்திப்போம்.

(தொடரும்.)

ஆ-போ.

---

## அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(38 - ம் பக்கத்தொடர்ச்சி)

ஆனந்த—நண்பனே! நீ இந்த விஷயத்தை யென்னை நம்பி யென்னிடம் விடுவதற்காக உண்மையாகவே நான் உன்னுடைய சினேகிதத்தை மிகவும் மெச்சிக்கொண்டு சந்தோஷ மடைகிறேன். ஆனால் நானும் உன்போல் ஒரு முக்கியமான குற்றத்தைக் கண்டு பிடிப்பதாக ஒப்பிக் கொண்டிக்கிறேன். அதனால் இக்கொலைக் குற்றத்தில் தலையிட்டுக் கொள்ள எனக்கு அவகாசமில்லை யென்பதற்காக மிக்க விசனப்படு கிறேன்" என்றான்.

தேவராஜு:—அட துர்அதிஷ்டமே! இம்மாதிரி யென்று எனக்கு மட்டும் தெரிந்திருந்தால் உனக்கு வீணாய் இவ்வளவ காலஹரணத்தை யுண் டாக்கி யிருக்கமாட்டேன். அப்படிப்பட்ட குற்றம் என்ன நீ கண்டு பிடிக்க வேண்டியது?

ஆனந்த:—உன்போன்ற நண்பனுக்குக் கூற எனக்குப் பயமில்லை. ஆனால் சங்கதி எள்ளளவுகூட உன்மனதி லிருந்து வெளித்தாண்ட லாகாது. இரயில்பாதையில் இங்கிருந்துஅமலாபூர்க்குள்ளாகத்தபால்கள் களவு போகின்றன. நேற்று அதைக் கண்டு பிடிக்க நான் தபால் பிரதம அதிகாரியிடம் ஒப்புக்கொண்டு காலையில்தான் நவீனபுரியிலிருந்து இங்குவந்தேன்.

தேவ:—அடடா. இது என் துர்அதிர்ஷ்டமே. அப்படியானால் நீ என்விஷ யத்தைக் கவனிக்க முடியாதோ?

ஆனந்த.—பொறுபொறு,கொல்லப்பட்டவனுடைய மகனாகிய சாமிநாதன் மெயில் ஏஜென்ட் என்று கூறினையல்லவா?

தேவ.—ஆம் ஆம்.

ஆனந்த:—"அப்படியாயின் எதற்கும் அந்தக் கொலைக் குற்றத்தின் விவரத்தைக்கூறு" என்றான்.

தேவராஜு அவ்வாறே கூற ஆனந்தஸிங் தன் குறிப்புப் புத்தகத்தில் யாவும் குறித்துக்கொண்டு,

" இருக்கட்டும்; உன் சம்பந்தமான விஷயத்தையும் ஒரு பக்கம் கவனித்துக் கொள்கிறேன் " என்றான்.

அக்குறிப்புகளை யெழுதிக்கொண்டதே இவற்றிற்கும் தனக்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பதுபோல் ஆனந்தஸிங் மனதில் திடீரென்று புலப்பட்டது.

இவ்வாறு இருவரும் சிந்தனையி லிருக்கும்போது திடீரென்று தேவராஜு ஆனந்தஸிங்கின் தோளைத்தொட்டு மிக்க ஆத்திரத்தோடு "இதோ இதோ ! அதேமனிதன் - நமது புகைப்படத்திலுள்ள மனிதன், நமது அதிர்ஷ்டமே " என்று திரையைச் சற்று விலக்கிப் பக்கத்து அறைக்குள் அப்போதுதான் வந்து நின்ற ஒரு மனிதனைச் சுட்டிக்காட்டினான்.

அம்மனிதன் நடுத்தரமான உயரமுடையவனாய்த் தடித்த பலசாலியாயிருந்தான். அவன் கழுத்தும் முகமும் நல்ல கொழுத்த வேட்டை நாயுடையவைபோ லிருந்தன. அவன் குறிகளனைத்தும் அவன் மிக்க துணிகரமுடைய போக்கிரியும் பரமதுஷ்டனு மென்று தெரிவித்தன.

அவன் அந்த அறைக்குள் நுழைந்து நடுமையத்தில் நின்று நாற்புறங்களிலும் சுற்றிப் பார்த்துவிட்டு தனக்குத் தெரிந்தவர்கள் யாருமில்லையென்று கண்டுகொண்டு, ஹோட்டல் முதலாளி யிருக்குமிடத்தை நோக்கிச் சென்றான். பட்டர் வீதியில் அவன் இரங்கநாதன் என்ற பெயரால் யாவர்க்கும் தெரிந்தவன்.

ஹோட்டல் காரனாகிய மார்க்கபந்து அச்சமயம் ஏதோ சந்தோஷ மனத்தோ டிருந்ததால் மிக்க உற்சாகத்தோடுஇரங்கநாதன் கையைக்குலுக்கிக்கொண்டு அவனுக்கு நல்வரவுகூறிச் சம்பாஷிக்கத் தொடங்கினான்.

மார்க்கபந்துவும் அவனும் மிக்க அறிமுக மானவர்கள். இரங்கநாதன் அடிக்கடி அங்குவருபவன். அவனால் ஹோட்டல் காரனுக்கு நல்ல வருமானமுண்டு. ஆகையால் அவனைக்கண்டதே மார்க்கபந்து சந்தோஷமடைந்து அவன் கூறியபடி ஒருபுட்டி பிராந்தியைத்திறந்து அவனோடு கூடியருந்த ஆரம்பித்தான்.

துப்பறிவோர் இருவரும் அவர்களிருவரையும் மிக்க உன்னிப்போடு கவனித்துக்கொண் டிருந்தார்கள். ஆனந்தஸிங் "இவன் கொலை செய்யும் ஆசாமியே; நீ யிவன் மேல் ஐயுறுவது சரியே. ஆனால் இவன் அக்கொலையைச் செய்தானென்பதற்கு உன்னிடம் என்ன ருசுவிருக்கிறது ?" என்றான்.

தேவராஜு:—இவன்மேல் சந்தேகப் படுவதற்குப் போதுமான காரணமிருக்கிறது. முதலாவது கொலை நடந்ததற்கு முன்தினம் இவன் கோட்டை ஸ்டேஷனில் காணப்பட்டிருக்கிறான்.

ஆனந்த:—அதினாலேயே அவன்மேல் குற்றத்தை ருசுப்படுத்த முடியாது. அன்று அவன் வேறிடத்திலிருந்ததாய் ருசுப்படுத்தி விடக்கூடும்.

தேவ:—இல்லை யில்லை. அதை மட்டுமே நான் நம்பிக்கொண் டிருக்கவில்லை சரியான ருசு ஏதாவ தகப்படு மென்பதற்கே இப்போது முயற்சிசெய்துகொண் டிருக்கிறேன். (தொடரும்.)

ஆறணி-குப்புசாமி முதலியார்.

## ஓர் துக்க சம்பவம்

## ஸ்ரீ லோகமானிய திலகர் காலஞ் சென்றார்.

1920-ஆம் ஜுலைமீ 31உ சனிவாரம் இரவு 12-40 மணிக்கு நம் பாரத மாதாவின் ஒப்பற்ற முதற் புத்திர சிகாமணியும், தன் வாழ் நாள் முழுமையும் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கே உழைத்தவரும், எத்தகைய துன்பங்கள் நேரினும் சலியாது ஊக்கங் குன்றாது தேசத்தொண்டைச் செய்து வந்தவரும், தெய்வ பக்தி இராஜ பக்தி குன்றாத உத்தமருமாகிய ஸ்ரீமான், உலோகமான்ய பால கங்காதர திலகர் பம்பாய் நகரில்பரலோகப்பிராப்தியடைந்தார். இவர் 1856ஆம் ஜுலைமீ 23உ பம்பாய் மாகாணத்திலுள்ள இரத்னகிரியிற் பிறந்து, 1876ஆல் பி. எ. பட்டம் பெற்று, 1879ஆல் சட்டப் பரீட்சையில் தேறி வக்கீலாக விருந்து, 44-வருடங்கள் தாய் நாட்டிற்காக உழைத்தவர். இச் சம்பவத்தால் நமது தாய் நாடடைந்த நஷ்டம் அளவிடக் கூடாததாகும். அவர் மரணத்தைக் கேட்ட ஒவ்வொரு இந்தியன் மனமும் துயர்க் கடலில் மூழ்கு மென்பதில் ஐய மில்லை.

இது நமக்கு ஆற்றொணுத் துயரத்தை யளிப்பதே யாயினும் இதிலும் நாம் சற்று தேறுதலடைய வேண்டிய காரணம் ஒன்றுளது. அதாவது உலகில் அக்கிரமம் அதிகமாகும் போது ஆண்டவன் அவதரித்துத் துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து தருமத்தை நிலை நாட்டுவது போல, பன்முறை பூலோகத்தில் அவதரித்து நீதியையும் க்ஷேமத்தையும் நிலை நிறுத்துவதையே தொழிலாக வுடைய மகாத்மாக்களும் உளர். இவர்களில் சிலர்க்குத் தாம் கருதியவாறு ஜனன மெடுக்கும் சக்தியு முண்டு. இவர்கள் இவ்வாறே பன்முறை உலோகோபகாரார்த்தமாகச் சனித்து மகாப் பிரளயத்தில் கைவல்ய முத்தியைப் பெறுவார்களென்றும், பீஷ்மர் முதலியோர் இத்தகையோ ரென்றும், இவர்களுக்கு அதிகார புருஷர் என்று பெயர் என்றும் ஆன்றோர் நூல்களி லருளப்பட் டிருக்கிறது. ஆதலின் நமது திலகரின் இது காறுமிருந்த மேற்போர்வை யழிந்துபோயினும், அவர் இன்றும் உளர், என்றும் உளர் வேறு மேறபோர்வை யோடும் நாமரூபத் தோடும் மறுபடி நட் தாய்நாட்டிற் றோன்றுவர்.

அவர் இறந்த 10வது நாளாகிய 9-8-1920 சோமவாரம் நம் தேசமுழுதும் பக்தியோடு அவர் மரணத்திற்காக துக்கங் கொண்டாடப் பட்டதாகவும், அநேக விடங்களில் அவருடைய ஞாபகச்சின்ன நிதிக்காகப் பொருள் சேகரிக்கப் பட்டதென்றும் பத்திரிகைகளின் வாயிலாக அறிகிறோம்.

நாம் அவருக்குக் காட்ட வேண்டிய நன்றியை யெப்போதும் மறவா வண்ணம் அருள் புரியுமாறு ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.

இரர்யபஹதூர் கன்னன் செட்டியார் பரகதி யடைந்தனர்:—

இச்சென்னை நகரிலுள்ள வைசியகுலச் செல்வச் சீமான்களில் இவரும் ஒருவர். அநேகர் பொது விஷயங்களில் பணத்தைச் செலவிட்டார்களாயினும், இவர் நம் சந்ததியாரின் இருமைப்பயன்களுக்கும் ஆதாரமானதும் சாசுவதமானதுமாகிய தருமங்களை யேராளமாகச் செய்தவர். இந்த நகரத்தில் பல விடங்களில் இவரால் நமது பெண்பிள்ளைகளுக்குப் பாடசாலைகள் தாபிக்கப்பட்டு நன்கு நடைபெற்று வருகின்றன. இப்புண்ணிய சீலர் இவ்வருடம். ஆகஸ்டு மீ 3உ மங்களவாரம் இப்பூவுலக வாழ்க்கையைத் துறந்து விண்ணுல கடைந்தன ரென்பது மிக்க விசனிக்கத்தக்க விஷயம். ஆண்டவன் அப் புண்ணிய புருடரின் ஆன்மா பரசுக நிலையடையும் வண்ணம் அருள் புரியவேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்

## இரௌத்திரிஞு புரட்டாசிமீ—சாலிவாகனம்1843-கலியுகாதி 5022

## பசலி 1329-30—கோல்லம் 1095-96 - ஹிஜரி-1338-39

## இங்கிலீஷ் 1920-ம்ஞு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசிமீ | செப்டம்பர் / 1920ஞு அக்டோபர்மீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வி | சது-26-15 | சுவா-35-57 | அ-35சி | கணபதிபூஜை |
| 2 | 17 | வெ | ப-28-18 | விசா-38-41 | சித்-60 | தீவாந்தரப் பிரயாணம் |
| 3 | 18 | ச | சஷ் 31-23 | அனு-43-27 | சித்-60 | நாற்றுநட, யாத்திரை |
| 4 | 19 | ஞா | சப்-35-30 | கே-49-10 | ம-49சி | சுரங்கத்தில் நுழைய |
| 5 | 20 | தி | அ-40-17 | மூல-55-26 | சி-55உ | ருதுசாந்தி |
| 6 | 21 | செ | நவ-45-32 | பூரா-60-0 | சி-60 | கணிதாரம்பம் |
| 7 | 22 | பு | தச-50-38 | பூரா-2-22 | அமி-60 | சீமந்தம் |
| 8 | 23 | வி | ஏ-55-13 | உத-8-23 | சி-60 | சீமந்தம |
| 9 | 24 | வெ | து-58-1 | திரு-14-3 | ம-14-சி | விருஷபம் பும்ஸவனம் |
| 10 | 25 | ச | தி-60-0 | அவி-18-52 | சி-18அ | வியாபாரம், யந்திரவேலை |
| 11 | 26 | ஞா | தி-2-23 | சத-22-35 | சித்-60 | நாற்றுநட. |
| 12 | 27 | தி | ச-2-46 | பூட்-25-6 | ம-25சி | கெர்ப்பாதானம் |
| 13 | 28 | செ | ○-2-51 | உத்-26-19 | சித்-60 | கிழக்கு பிரயாணம் |
| 14 | 29 | பு | பிர-1-42<br>துவி57-55 | ரே-26-20 | மர-60 | ............ |
| 15 | 30 | வி | தி-55-34 | அசு-25-14 | அ-25சி | வியாபாரம், நந்தவனம். |
| 16 | 1 | வெ | ச-51-38 | பர-23-6 | சித்-60 | பரணியின்படி |
| 17 | 2 | ச | ப-46-43 | *கிரு-19-48 | அ-சி60 | விருஷபம் பிரயாணம் |
| 18 | 3 | ஞா | சஷ்-41-10 | ரோ-16-23 | சித்-60 | சீமந்தம், வியாபாரம் |
| 19 | 4 | தி | சப்-35-13 | மிரு-12-31 | அ-12சி | அதிகாரம்பெற |
| 20 | 5 | செ | அ-29-7 | திரு-8-0 | ம-8சி | கணக்கு தீர்மானம்செய்ய |
| 21 | 6 | பு | நவ-23-13 | புன-4-6 | சி-60 | கன்னி நாற்றுநட |
| 22 | 7 | வி | தச-17-23 | பூச-0-37<br>ஆயி-56-22 | அசி-60 | |
| 23 | 8 | வெ | ஏ-12-6 | ம-53-53 | ம-53-சி | |
| 24 | 9 | சனி | து-7-8 | பூர-51-32 | சித்-51சி | |
| 25 | 10 | ஞா | தி-3-34 | உத்-50-12 | அசி-60 | |
| 26 | 11 | தி | ச-0-40●<br>அமா-54-0 | அஸ்-46-55 | சி-54பி | |
| 27 | 12 | செ | பிர-59-11 | சித்-50-53 | சித்-60 | |
| 28 | 13 | பு | து-58-59 | சுவா-53-3 | சித்-60 | |
| 29 | 14 | வி | தி-60-0 | விசா-56-27 | சித-60 | |
| 30 | 15 | வெ | தி-1-21 | அனு-60-60 | சித்-60 | |
| 31 | 16 | சனி | சவு-4-37 | அனு-1-14 | சி-60 | |

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | 9-துலா-சு<br>14-துலா-பு<br>22-த-செ | | |
| | | | குரு சனி |
| | செவ் | ராகு | ஞா-பு சு |

PRINTED AND PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" PRESS, 15, VENKATESA MAISTRY STREET, MADRAS